

# கல்கி

## பொருளடக்கம்

சௌமிய, தை 12 — 1970, ஜனவரி 25





## குமாரி லலிதாவின் பரதநாட்டிய அரங்கேற்றம்

தமிழர்கள் செல்லுமிடந்தோறும் தமிழ்ப் பண்பும், தமிழர்களின் கலைச் செல்வமாகிய பரத நாட்டியமும் கூடவே செல்கின்றன என்பதை வட இந்திய தலைநகரங்களில் அடிக்கடி நடைபெற்று வரும் பரதநாட்டிய நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டுகின்றன. ஹைதராபாத்திலுள்ள தமிழர்கள் மட்டும் இதற்கு விலக்கா என்ன? சென்ற நவம்பர் 17ம் தேதியன்று ரவீந்திரபவனில் நடைபெற்ற குமாரி லலிதா பாலசுப்பிரமண்யத்தின் சம்பிரதாயமான பரதநாட்டிய அரங்கேற்றம் அந்நகரில் நடைபெற்ற சமீபகால கலை நிகழ்ச்சிகளில் குறிப்பிடத்தக்கது. நாட்டையில் அலாரிப்பும், ஸாவேரியில் ஜதிஸ்வரமும், தோடி வர்ணமும் முதற்பாதியில் நிகழ்ச்சிக்கு விறுவிறுப்பை அளித்தன. அபிநய பாவங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உருப்படிகள் பரதநாட்டிய நிகழ்ச்சிக்கென்றே ஏற்பட்டவை. சங்கராபரணத்தில் அமைந்த க்ஷேத்ரக்ஞ பதமும், நடனமாடினார் உருப்படியும் திறமையுடன் அபிநயிக்கப்பட்டன. "எவி பிராண"வுக்கு அபிநயங்கள் மிகப் பொருத்தமாக இருந்தன. குமாரி லலிதா பாலசுப்ரமணியம் ஹைதராபாத் நகரில் பரத கலையைப் பயிலுவிக்கும் நாட்டிய கலாலய மாணவி ஆவார். இத் துறையில் குமாரி லலிதா அடைந்துள்ள திறமைக்கும், தன்னம்பிக்கைக்கும் சான்று கூறுவதுபோல் நாட்டிய ரத்னம் என்ற சான்றிதழும் அன்னாருக்கு அரங்கேற்ற முடிவில் வழங்கப்பட்டது. ஆடல் கலைக்கு மற்றும் ஒரு தமிழ் மாணவி ஆந்திரத் தலைநகரில் தோன்றியுள்ளார் என்பது தமிழகத்துக்குப் பெருமையே.











சோஷலிச ஆட்சியில்!

சோஷலிஸம்

அரசியல் வாதிகள்

தேசப் பொருளாதாரம்

நமது வளர்ச்சியைத் தடுப்பது எது?

PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 29 ❀ இதழ் 26



# நமது ஜனநாயகம்

லாட்டரி டிக்கெட் வாங்கியவர் மிகப் பெரிய தொகையைப் பரிசாக ''சம்பாதித்தார்'' என்று வெளியாகும் ஒவ்வோர் அறிவிப்பும் மக்களது சூதாட்டப் பசியை வளர்ப்பதாக இருக்கிறது. சோஷலிஸத்தைப் பற்றிய பேச்சு நிறைய மக்கள் காதில் விழுகிறது. ஆனால் அதே சமயம் லாட்டரியால் புதிதாக உண்டாக்கப்படும் பெரிய சொத்துக்கு உடையவர்களாக ஆவதில் அவர்களுக்கு அக்கறை உண்டாக்கப்படுகிறது. முடிந்தால் வேலை செய்யாமலேயே பெரிய சொத்து கிடைக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகின்றனர். மாநில சர்க்கார்கள் ஆசை காட்டி இந்தச் சூதாட்டத்தில் ஈடுபடுமாறு கோடிக்கணக்கான மக்களை ஈர்க்கிறார்கள். இந்தச் சூதாட்டத்துக்குப் பிரதம மந்திரி பேசாமல் ஊக்கமளித்து வருகிறார். அதற்கிடையே, ''உழைத்துச் சம்பாதியுங்கள்'' என்று ஒரு புதிய கோஷத்தையும் அவர் எழுப்புகிறார். இப்படிச் செய்வது எவ்வளவு வேடிக்கையாக இருக்கிறது! மேல் அந்தஸ்தில் நாணயமில்லாத அரசியல் நடத்தை, கீழ்மட்டத்தில் சொல்வதையெல்லாம் நம்புகிறவர்களாக மக்கள் இருக்கும் சோகநிலை—இதுவே நமது ஜனநாயகம்.

சந்தேகத்துக்கு இடமான நண்பர்களின் தயவில் அதிக நம்பிக்கை வைக்கக் கூடாது என்பது புதிய அறிவுரை அல்ல. இது மெய்ப்பிக்கப்பட்ட மிகப் புராதனமான கோட்பாடு. இன்றைக்கு இது முற்றிலும் பொருத்தமானது. திரு பிராங்க் மொரேஸ் வெளியிட்டுள்ள கீழ்க்கண்ட கருத்துக்கள் கவனத்துக்கு உரியவை :

> ''பிரதமர் ஒரு விஷயத்தைத் தெளிந்தறிய வேண்டும். அதிகாரத்துக்காக அவருடன் போட்டியிடுபவர்கள் எதிர்த் தரப்பிலுள்ள காங்கிரஸில்தான் இருக்கிறார்கள் என்று அவர் கருதலாகாது. அவரது சொந்தச் சுற்று வட்டங்களிலேயே அப்பேர்ப்பட்டவர்களை நிறையக் காணலாம். அவரது மிக அபாயகரமான போட்டியாளர் அவரது தரப்பிலேயே இருக்கின்றனர். ஓர் அடிப்படையான தவற்றைப் பிரதமர் இழைக்க வேண்டும் என்று அவர்கள் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அத்தகைய தவற்றை அவர் இழைத்தால், உடனே அதைப் பயன்படுத்திக் கொண்டு அவரைக் கீழே தள்ளிவிட அவர்கள் தயாராக இருக்கிறார்கள். கண்ணுக்குத் தெரியும் பகைவர்கள் அவருக்கு எதிரே இருக்கின்றனர். அதிதீவிர நடவடிக்கை போல் தமக்குத் துணை புரியக்கூடியது வேறு எதுவும் இல்லை என்பதை அவர்கள் அறிவர். நேற்று பாங்குகளை அரசுடைமையாக்கி விட்டார்கள். அடுத்துப் பொது இன்ஷ்யூரன்ஸ் அரசு உடைமையாகப் போகிறதாம். அதையடுத்து மன்னர்களை ஒழித்துக் கட்டுவது, நகர்ப்புற வருமானங்களுக்கு உச்சவரம்பு, இறுதியாகச் சொத்துரிமை மீது கைவைப்பது இப்படியாக நடக்குமாம்! பிரதமரின் இடதுசாரி சகாக்கள் இவற்றையெல்லாம் தமது சொந்த நோக்கங்களுக்காக வற்புறுத்துகிறார்கள். இக்கொள்கைகளைத் தமதாக்கிக் கொள்வதன் மூலம் பிரதமர் தமக்குத் தாமே மரண ஓலை எழுதிக் கொள்கிறார்.''

கம்யூனிஸம் நடத்தும் போராட்டம் லட்சியத்துக்கும் மனித இயல்புக்குமிடையே நடைபெறும் போராட்டமாகும். மனித சுபாவம் தனி நபர்கள் மூலம் செயல்படுகிறது. ஒரு சமுதாயத்தை அது ஊக்கவேண்டுமாயின் அத்தகைய சமுதாயம் சிறியதாக இருக்க வேண்டும்; ஒரு தலைவனின் ஆதிக்கத்துக்கு முழு அளவில் அது கட்டுப்பட்டு நடந்து கொள்வதாய் இருக்க வேண்டும். அந்நிலையில்தான் அது ஒரு தனி நபரின் தன்மையை அடைகிறது. லட்சியத்துக்கும் இயற்கையான நியதிகளுக்கும் நடைபெறுகின்ற போராட்டத்தில் இறுதி வெற்றி இயற்கை நியதி

களுக்குத்தான். கம்யூனிஸப் பரீட்சைகள் நடைபெறும் எல்லாத் தேசங்களின் அநுபவமும் இதுவே. இந்தப் போராட்டம் நீடித்து நடைபெறுவதாக இருக்கலாம். ஆனால் வெற்றி என்னவோ இயற்கைக்குத்தான். மனித சுபாவத்துக்கு மதிப்புக் கொடுத்து அதைப் பயன்படுத்திக் கொள்ளாமல் எந்த ஆட்சியும் வெற்றி பெற முடியாது. நிர்ப்பந்தம் செய்து, மிடிமையைப் பரப்பி வெற்றி காணலாம் என்று நினைப்பது வெறும் பிரமையே.

மாஜி மன்னர்களுக்கு ராஜ மானியம் தருவது 'காலத்துக்கு ஒவ்வாதது' என்று கூறுகிறார் திரு சவான். இந்த மானியங்கள் புனிதமான வாக்குறுதிகளின் அடிப்படையில் தரப்படுபவை. அவர்களுடைய பிரதேசங்களை எடுத்துக் கொண்ட போது இந்த வாக்குறுதிகள் அளிக்கப்பட்டன. இதன் மூலம் ஏற்படும் வருஷச் செலவு சுமார் நான்கு கோடி ரூபாய். இந்துஸ்தான் ஸ்டீல் என்ற ஒரே ஒரு அரசாங்க உருக்குத் தொழிலின் மூலம் தேசத்துக்கு வருடா வருடம் ஏற்படும் நஷ்டம் சுமார் நாற்பது கோடி. ராஜமானியம் அதில் பத்தில் ஒரு பங்குகூட இல்லை. இதைப் பற்றி நான் நிறைய எழுதியாகி விட்டது. சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்ல நான் விரும்பவில்லை. அப்படிச் சொன்னால் அது பொருளற்றதாகி விடும்; அதன் முக்கியத்துவமும் குறைந்து விடும். திரு பிராங்க் மொரேஸ் இதையே கச்சிதமாகச் சொல்லியிருக்கிறார். அவர் கூறுகிறார்: ''இந்திய சர்க்கார் சட்டத்தின் கோட்பாடுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டது என்று ஸ்ரீமதி இந்திரா காந்தி நினைக்கக் கூடும். ஆனால் தர்ம நியாயத்தை மதிக்காத நிலைக்கு அது சரிய வேண்டிய அவசியமிருக்கிறதா?''

ஸ்ரீமதி இந்திரா காந்தி இழைத்த தவறுகள் மறக்க முடியாதவை. அவற்றின் காரணமாக இப்போதைய பார்லிமெண்டில் உள்ள பெரும்பான்மையினர், எது நியாயம், எது அநியாயம் என்ற உணர்வு அற்றவர்களாகி விட்டனர். ஒரு காலத்தில் நியாய அநியாய உணர்வு அவர்களைச் சிறிது தயங்கச் செய்ததுண்டு. திரு சவான் சொல்வது ஏற்கப்படுமானால் வாக்கு மீறாமல் இருக்க வேண்டும் என்ற மதிப்புயர்ந்த நியதியே இன்றைய நிலைக்கு ஒவ்வாததாகி விடுகிறது.

கிளைவ், ஹேஸ்டிங்ஸ் காலத்தில் மன்னர்களைக் கிழக்கிந்தியக் கம்பெனி பதவியிலிருந்து விரட்டிய போது அளிக்கப்பட்ட வாக்குறுதிகளே தீவிர வாதத்தின் பெயரால் அடிபட்டுப் போகவில்லை. அந்தப் பழைய உடன்பாடுகளைப் புறக்கணிக்காமல் அரசு மதித்ததை இந்திய சர்க்காரின் ஸெக்ரிடேரியட், ஸ்ரீ சவானுக்கு எடுத்துக் காட்ட வேண்டும்.

பரம்பரையான வியாபாரிகளை விலக்கி விட்டு, தானே வியாபாரம் செய்யும் அரசு விரைவில் திவாலாகி விடும் என்பது ஒரு குஜராத்திய பழமொழி. மற்றொரு புது மொழியையும் சேர்த்துக் கொள்ளலாம். வாக்குறுதிகளை மீறி அரசியல் சாஸனத்தின் மூலம் சார்ந்துள்ள புனிதமான பொறுப்புக்களை நிராகரிக்கின்ற ஓர் அரசு, நாகரிக நாடுகளின் ஜாபிதாவில் இடம் பெறாமல் மறைந்து விடும். நீதியற்ற செயல்களில் இறங்கும் சிந்தனைகளை வரப்போகும் துரதிர்ஷ்டத்துக்கு அறிகுறிகளாகக் கொள்ள வேண்டும்.

(''ஸ்வராஜ்யா''வில் ராஜாஜி எழுதியது.)

# தொழிற் கட்சித் தலைவர் சொல்கிறார்

சோஷலிஸத்திலும் தொழிலாளர் நலனிலும் அக்கறை கொண்டுள்ள கட்சி பிரிட்டிஷ் தொழிற் கட்சி. தொழிற்சங்கங்களின் ஆதரவுடன் பதவிக்கு வந்துள்ள கட்சி.

பிரிட்டிஷ் தொழிலாளர் நலன் அமைச்சர் ஸ்ரீமதி பார்பரா காஸில், தொழிலாளர்கள் ஒரு வரம்பற்ற வகையில் ஊதிய உயர்வு கோருவதைக் கண்டித்தார். அத்துடன், ''எந்த முட்டாளும், தொழிலாளி பெறும் காகித ஊதியத்தை உயர்த்தி விடலாம். ஆனால் உண்மையான ஊதியத்தை உயர்த்தி விட முடியாது. அது மிகவும் சிக்கலான விஷயம்!'' என்று கூறினார். ''உண்மையான ஊதியம்'' என்பது பணத்தால் பெறக் கூடிய பொருள்களைக் குறிக்கிறது. ''காகித நோட்டுக்களால் ஊதிய உயர்வு அளித்தால் ஆரம்பத்தில் எந்தக் கஷ்ட தசையில் இருந்தோமோ அந்த நிலைக்கே வெகுசீக்கிரம் திரும்பப் போய் விடுகிறோம்!'' என்று எச்சரித்தார். அவரைத் தொடர்ந்து பேசிய பிரிட்டிஷ் பிரதமர் வில்ஸன் இன்னும் சற்று விளக்கமாகக் கூறினார்:

''ஒவ்வொருவரும் இன்றுள்ள விலைவாசிகள் அப்படியே நிலைத்திருக்கும் என்று எண்ணிக் கொண்டு ஊதிய உயர்வு கோருகிறார்கள். ஒருவனுக்கு ஊதியம் உயர்த்தினால், அது அடுத்தவனுக்கு விலைவாசியை உயர்த்தியதாகும்'' என்று தெளிவுபடுத்தினார்.

இதைத்தான் சுதந்திரக்கட்சி ஆதிநாளிலிருந்து சொல்லி வருகிறது.

பிரிட்டனில் தொழிற் கட்சித் தலைவர்கள், வில்ஸனும், பார்பரா காஸிலும் அடிப்படைப் பொருளாதார உண்மைகளை உணர்ந்து நடந்து வருகிறார்கள். இந்தியாவிலும் அத்தகைய நிலை விரைவில் ஏற்பட வேண்டும்.

அப்போதுதான் விலைவாசிகள் ஒரு நிலையில் இருக்கும். தொழிற்சங்கங்களில் இல்லாத கோடிக்கணக்கான பாமர மக்கள் இமர் இமர் என்று விலைவாசி ஏற்றத்தால் பாதிக்கப்படாமல் இருப்பார்கள்.

இந்தப் பொருளாதார உண்மைகளைப் புரிந்து கொண்டால்தான் வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படும் நமது பொருள்களைக் குறைந்த விலைக்கு விற்க முடியும். வெளிநாட்டு மார்க்கெட்டின் விலைவாசிப் போட்டியைச் சமாளித்து, நமக்கு மிக அவசியத் தேவையான அந்நியச் செலாவணியைச் சம்பாதிக்க முடியும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

"சர்க்காரின் நிருவாக இயந்திரம் நடு நிலைமை வகிக்கும் கொள்கை இன்றைய இந்தியாவின் நிலைமைக்குப் பொருத்தமானதல்ல என்று ஸ்ரீ ஜகஜீவன்ராம் பம்பாயில் சமீபத்தில் நடைபெற்ற அவரது கட்சிக் கூட்டத்தில் கூறியிருக்கிறார். (தேர்தல்களால் பாதிக்கப்படாமல்) நிரந்தரமாகப் பணி புரியும் அரசாங்க ஊழியத்தில் கட்சி அரசியலைப் புகுத்துவதற்குப் பொதுப்படையாக ஒரு போராட்டம் தொடங்க இது ஒரு முன்னோடியாக இருக்கலாம் என்று பொறுப்புள்ள வட்டாரங்கள் பயந்தது மெய்யாகி வருவதாகத் தோன்றுகிறது"— இவ்வாறு "ஹிந்து" கூறுகிறது. இந்தியாவில் அரசாங்க ஊழியத்தை அரசியல் கட்சிச் சார்புடையதாக்குவது விபரீதமாகுமேயன்றி, சீர்திருத்தமாகாது. பக்குவம் அடையாத, யோசனை இல்லாத அரசியல்வாதிகள் என்ன சொன்னாலும் சரி, இது தவறு. சரித்திரத்திலேயே மிக நீண்ட காலமாக ஜனநாயகத்தைப் பின்பற்றி வரும் பிரிட்டனில், எந்தக் கட்சி அதிகாரத்திலிருந்தாலும், கட்சிச் சார்பில்லாத நிருவாக இயந்திரம் நிரந்தரமாகப் பணி புரிந்து வந்திருக்கிறது. அந்த நீண்ட அநுபவத்தின் அடிப்படையிலேயே இந்தியாவில் நிருவாக இயந்திரம் அமைக்கப்பட்டது. இப்போது அதற்கு நேர் விரோதமான போக்கு உத்தேசிக்கப்படுகிறது.

★

பிரிட்டனோ அமெரிக்காவோ பாகிஸ்தானுக்கு எதிராக இந்தியாவுக்கு உதவி செய்யும் என்று நம்மில் அறிவினர் கூட எண்ணியதில்லை. ஆனால் ருஷியா மட்டும் நாம் கூட்டு சேராத கொள்கையைச் சாமர்த்தியமாகக் கடைப்பிடிக்கும் வரையில் நம் தரப்பில் உதவும் என்று ஒரு கற்பனை நம்மில் சிலரிடை நிலவி வந்தது. ஆயினும் தெளிந்த சிந்தனையுடன் பார்த்திருந்தால் இது காரிய சாத்தியமில்லாத நம்பிக்கை என்று புரிந்திருக்கும். அந்நிய வல்லரசுகள் யாவுமே தங்களது அநுகூலத்தைக் கருதுபவைதாம். தங்கள் நலனைப் பாதிக்கக் கூடிய விதத்தில் ஏற்படக் கூடிய உலகப் பூசல்களைத் தவிர்க்கவே வல்லரசுகள் விரும்புகின்றன.

இப்போது ருஷியாவிலிருந்து நமக்கு வந்துள்ள நல்லுரை, நாம் பாகிஸ்தானுடன் நல்லெண்ணத்துடன் சமாதானமாக வாழ்ந்து டாஷ்கென்ட் பிரகடனத்தைப் பற்றி ஒழுக முயற்சி எடுக்க வேண்டும் எனக் கூறியுள்ளது. "உலகப் பூசலைத் தவிர்க்க" இவ்வாறு செய்ய வேண்டும் என்று ருஷியா கூறுகிறது. அதோடு நம்மைத் திவாலாகும் நிலையிலிருந்து காத்துக் கொள்ளவும் இந்த முயற்சி தேவை என்று நான் கூறுகிறேன். என் ஆலோசனை விநோதமாகலாம். ஆனால் இப்போது ருஷியா தான் தில்லி விசித்திரங்களுக்கு யஜமான ஸ்தானம் வகிக்கிறது என்பதைப் பார்க்குமிடத்து, அதன் யோசனைக்கேனும் மரியாதை காட்டப்படும் என்று நம்ப இடமுண்டு.

"(இந்தியா, பாகிஸ்தான் ஆகிய) இரு நாடுகளையும் சோவியத் யூனியன் நண்பர்களாகக் கருதுகிறது. இவ்விரு நாடுகளிலும் இவற்றின் பூசலைக் கிளறி விடுவதில் முனைந்திருக்கும் சக்திகளைப் பற்றி சோவியத் யூனியன் எச்சரிக்கை விடுத்திருக்கிறது" என்று ருஷியாவின் அதிகார பூர்வமான 'இஸ்வெஸ்தியா' பத்திரிகை முடிக்கிறது.

காச்மீரத்தைக் குறித்த என்னுடைய யோசனையை ஏற்பது அறிவுக்குப் பொருத்தமானது, அதுவே காரிய சாத்தியமும் ஆகும் என்பதை இந்தியா உணர எவ்வளவு காலம் பிடிக்குமோ, அறியேன். ஆனால் இந்த உணர்வு ஏற்படும் வரையில் ருஷியாவோ அமெரிக்காவோ கூறும் யோசனைகள் வெறும் வார்த்தைகளாக இருப்பதன்றி, பலன் ஏதும் தரா என்றே அஞ்சுகிறேன்.

பாரகன்
பிரபாத்
சரஸ்வதி
தங்கம் மற்றும்
தென்னாடெங்கும்








E.V.R.
பிக்சர்ஸின்

# ஏன்?



'உன்னத
குடும்பச்சித்திரம்'

டைரக்ஷன்
ராமண்ணா

தயாரிப்பு
E.V. ராஜன்

மூலக்கதை: கிருஷ்ணா

MARS-




உலகிலேயே மிகவும் பயங்கரமான, வேடிக்கையான, கொடுமையான, பைத்தியக்காரத்தனமான, நீண்ட பந்தயம் பிரான்ஸ் நாட்டின் புகழ்பெற்ற 'டூர் டி பிரான்ஸ்' என்ற சைக்கிள் ஓட்டும் பந்தயம்தான்! இதனை 'டூர்' என்று சுருக்கமாக அழைக்கிறார்கள்.

இருபத்து நான்கு நாட்கள் நடைபெறும் இந்த டூர் சைக்கிள் பந்தயம். 1959ம் ஆண்டில் 'டூர்' பந்தயம் ஜூன் 25ம் நாளன்று ஜெர்மானிய எல்லையிலுள்ள மல்ஹெளஸ் என்ற நகரில் தொடங்கி இருபது மலைக் கணவாய்கள் இருபத்திரண்டு பெரு நகரங்கள் ஆகியவற்றைக் கடந்து 2684 மைல்களைத் தாண்டி ஜூலை மாதம் 18ம் நாளன்று பாரிஸ் பெரு நகரில் முடிந்தது !

லட்சோப லட்சம் பிரஞ்சுக்காரர்கள் பேரார்வத்துடன் பார்க்கும் இப்பந்தயம், 1903ஆம் ஆண்டில் பிறந்தது. ''ஆட்டோ'' என்ற பிரஞ்சு நாளிதழ் தனது விற்பனையைப் பெருக்கிக் கொள்வதற்காக இந்தப் பந்தயத்தைத் தொடங்கியது. ஆயிரக்கணக்கான பந்தயங்களில் இதுவும் ஒன்று என ''ஆட்டோ'' ஆசிரியர்களாலேயே கருதப்பட்ட டூரின் முதல் பந்தயத்தில் மாரிஸ் காரின் என்பவர் வெற்றி பெற்றார். அவர் கடந்த தூரம் 1500 மைல்கள். அவர் தொழில் புகைப்போக்கிகளைச் சுத்தம் செய்வது.

மாரிஸ் காரின் பெற்ற மகத்தான வெற்றி பிரான்ஸ் நாட்டில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. 'ஆட்டோ' நாளிதழின் விற்பனை ஆயிரக்கணக்கில் அதிகரித்தது. இதைக்கண்ட ''ஆட்டோ'' ஆசிரியர்கள் ஆண்டுதோறும் டூரை நடத்த முடிவு செய்தனர்.

'டூர்' பந்தயத்தை நிகழ்த்துவதே ஒரு கலையாகக் கருதப்படுகிறது. ஆண்டுதோறும் பிப்ரவரி மாதமே அவ்வாண்டு 'டூ'க்கான திட்டங்கள் தீட்டப்படுகின்றன. பந்தய தூரம், போட்டியிடும் சைக்கிள் ஓட்டிகளின் எண்ணிக்கை, அவர்கள் கடக்கக்கூடிய நகரங்கள், அவர்கள் இரவு நேரங்களில் தங்கக் கூடிய நகரங்கள், அந்த நகரங்களிலுள்ள ஹோட்டல்களின் எண்ணிக்கை, ஒவ்வொரு 'டூர்' நகரத்தின் ஜனத்தொகை, அந்த ஜனக் கூட்டத்தைக் கட்டுப்படுத்தத் தேவையான காவலர்களின் எண்ணிக்கை ஆகிய இன்னோரன்ன இன்றியமையாத புள்ளி விவரங்கள் முதலில் சேகரிக்கப்படுகின்றன. டூர் பந்தயத்தில் கலந்துகொள்ளும் சைக்கிள் வீரர்கள் கடக்கும் ஒவ்வொரு நகரமும் அப்பந்தயத்தால் தனிச் சிறப்பு பெறுவதால் அப்படிக் கடக்கப்பட விரும்பும் நகரங்கள் ஒவ்வொன்றும் ஐம்பதாயிரம் ரூபாய் கட்ட வேண்டும், கப்பம் போல். அது மட்டுமல்ல; அவை மொத்தத்தில் ஆயிரம் படுக்கை அறைகள் நிறைந்த பல ஹோட்டல்களைக் கொண்டிருக்க வேண்டும். பந்தய வீரர்கள் தங்குவதற்கு எல்லா வசதிகளையும் செய்து தர வேண்டும். இப்படியெல்லாம் நிபந்தனைகள் உண்டு.

ஒரு 'டூர்' நடத்தக் கிட்டத்தட்ட ஐம்பது லட்ச ரூபாய் ஆண்டுதோறும் செலவிடப்படுகிறது. இதில் சரி பாதியை ''டூர்'' பந்தயத்தை விளம்பரமாக உபயோகிக்கும் நிறுவனங்கள் தந்து விடுகின்றன. சுமார் இரண்டு லட்சம் ரூபாய் செலவை 'ஆட்டோ' நாளிதழ் ஏற்றுக் கொள்கிறது.

டூர் பந்தயத்தில் மொத்தம் பன்னிரண்டு அணிகள் கலந்து கொள்கின்றன. ஒவ்வோர் அணியிலும் பன்னிரண்டு சைக்கிள் வீரர்கள். ஒவ்வோர் அணிக்கும் காவலாக மூன்று மோட்டார் வண்டிகள், ஒரு 'டிரக்' வண்டி, ஒரு குதிரை வண்டி, மூன்று சைக்கிள் ஓட்டும் கலையைக் கற்பிக்கும் வல்லுநர்கள், மூன்று டாக்டர்கள், மூன்று சைக்கிள் பழுது பார்ப்பவர்கள் உள்ளார்கள். அலுமினியத்தால் ஆன சைக்கிளின் எடை ஐந்து பவுண்டு. சைக்கிள் டயரின் அகலம் ஒரு கட்டை விரலின் அகலத்துக்குச் சமமானது.

'டூர்' பந்தய வீரர்கள் ஒரு நகரத்துக்குள் நுழையும்போது அந்த நகரமே அல்லோலகல்லோலப்படுகிறது. அந்த நகரில் உள்ள பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், அலுவலகங்கள் அனைத்துக்கும் அன்று விடுமுறை. கடைகளும் மூடப்பட்டு நகரமே திருவிழாக் கோலம் பூணுகிறது. நகரமாந்தர் அனைவரும் 'டூர்' செல்லும் பாதையின் இருமருங்கிலும் குழுமியிருப்பார்கள். 'டூர்' வீரர்கள் சைக்கிள்களில் முன்செல்ல அவர்கள்பின் மோட்டார் வண்டிகள், ஆம்புலன்ஸ் வண்டிகள், மோட்டார் சைக்கிள்களில் பத்திரிகை நிருபர்கள் முதலியோர் அணி அணியாகச் செல்வர். முண்டியடித்துக் கொண்டு காண வரும் ஜன வெள்ளத்தைக் கட்டுப்படுத்தப் பதின்மூன்றாயிரம் போலீஸ்காரர்கள் தேவைப்படுகிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள் !

1914ம் ஆண்டில் நிகழ்ந்த 'டூரி'ல் பால் டுபாக் என்ற வீரர் எல்லோருக்கும் முன்பாக வெகுவேகமாகச் சைக்கிளில் வந்து கொண்டிருந்தபோது சைக்கிள் திடீரென்று இரண்டாக உடைந்து விட்டது. டுபாக்கின் வெற்

றியை விரும்பாத சிலர் வெகு லாகவமாகச் சைக்கிளில் ஓரிடத்தை இரவோடு இரவாக ராணி வைத்திருந்தார்கள். அவர் இருபதடி ஆழமுள்ள பள்ளத்தில் எகிறி விழுந்தார்.

1950ம் ஆண்டில் நிகழ்ந்த 'டூரி'ல் பார்ட்டாலி என்ற இத்தாலிய சைக்கிள் வீரர் எல்லோருக்கும் முன்னால் வெகு வேகமாக வந்து கொண்டிருந்த போது வேறு நாட்டார் ஒருவர் வெற்றி பெறுவதைக் காணச் சகியாத சில பிரஞ்சு மக்கள் பார்ட்டாலியை உதைத்தனர்; அவரது சட்டையைக் கிழித்தெறிந்தனர்.

1959ல் சார்லஸ் கால் என்பவர் சைக்கிளில் ஏறியதுமே 'பொத்' என்று கீழே விழுந்தார். அவரது சைக்கிளில் உள்ள அத்தனை திருகாணிகளுமே கழற்றப்பட்டிருந்தன.

''டூர்'' பந்தயத்தில் மோசடிகள், ஏமாற்று வேலைகள், தகிடுதத்தங்கள் எல்லாம் நடக்கின்றன. இதைப் பிரஞ்சு மக்கள் அவ்வளவாகப் பொருட்படுத்துவதில்லை. மாறாக அவற்றால் ஏற்படும் வேடிக்கைகளைக் கண்டு விலா நோகச் சிரிக்கின்றனர்!

— அ. இராமதுரை

# அண்ணலின் வாழ்விலே....

## மௌனமும் உபவாசமும்

சத்திய தரிசனத்துக்காக அவ்வப்போது உபவாசமும் விரதமும் ஏற்றுக் கொள்ளும் ஓர் அன்பர், சாதுக்களைச் சந்தித்து உரையாடுவதுடன் ஆலயங்களுக்குச் சென்று வழிபடுவதும் உண்டு. அவர் தம்முடைய முயற்சி பற்றிக் காந்திஜிக்குக் கடிதம் எழுதுவார். கடைசியாக அவர், பன்னிரண்டு ஆண்டுகள் மௌன விரதம் இருக்கத் தீர்மானித்து, தம்முடைய வாயை மெல்லிய கம்பியால் இழுத்துக் கட்டிக் கொண்டிருந்தார். விரத காலத்தில் கோதுமை மாவை நீரில் பிசைந்து அதை ஒரு வேளை மட்டும் உணவாக எடுத்துக் கொண்டார். உண்ணும் போது, உதடுகளைப் பிணைக்கும் கம்பிகளை அகற்றி விட்டு, பிறகு கட்டிக் கொள்வார். தம்முடைய புதிய முயற்சி பற்றி அவர் காந்திஜிக்குத் தெரிவித்தார்.

அதற்குக் காந்திஜி அனுப்பிய பதிலில் ஒரு பகுதி வருமாறு: ''பல மாதங்களுக்குப் பிறகு உங்களுடைய கடிதம் பார்த்ததும் மகிழ்ச்சி அடைந்தேன். உள்ளொளி காண்பதற்காக நீங்கள் எடுத்துக் கொண்டுள்ள முயற்சியை நான் ஏற்கவில்லை. வாயை மூடிக் கட்டிக் கொள்வதால் மௌன விரதத்திலே வெற்றி காண முடியாது. நாக்கைத் துண்டித்துக் கொண்டால் பேசும் ஆற்றலை இழந்து விடலாம். ஆனால் பேசும் ஆற்றலிருந்தும், பயனற்ற சொற்களை விலக்கி விட்டு, மனத்தை அடக்கிப் பழகினால் தான் சாதனை வெற்றிபெறும். நீங்கள் ஏற்றுக் கொண்டிருப்பது விரதமல்ல. அது 'தாமஸ தபசு' என்று இதை விளக்கப்படி கூறலாம்.



''வேக வைக்காத உணவை உண்ணும் விரதத்தை ஏற்றுக் கொண்டால் காய்கனிகளையும் பாலையும்ஏற்கலாம். கோதுமை மாவை நீரில் பிசைந்து உண்பது சாஸ்திரத்துக்கு விரோதமானது. அது உணவு விஞ்ஞானத்துக்கும் முரணானது. நீங்கள் அனுஷ்டிப்பது விரதமல்ல. அது உடலை வருத்திக் கொள்ளும் முயற்சி. இதை விட்டு விடுங்கள். கபீர் கீதங்களை ஆய்ந்து படித்துச் சிந்தனை செய்யுங்கள். இயல்பாக வழிபடுவதே சிறந்தது. நான் சமுதாயத்துக்குச் சேவை செய்வதன் மூலம் இறைவனை வழிபடுகிறேன். என்னுடைய ஒவ்வொரு செயலையும் இறைவன் பெயரைச் சொல்லிக் கொண்டே செய்கிறேன். நான் கண்களை மூடிக் கொள்வதில்லை. காதுகளையும் வாயையும் பொத்திக் கொள்வதில்லை. வேறு எந்த விதத்திலும் உடலை வருத்திக் கொள்வதில்லை. நான் எதைப் பார்த்தாலும் அவை கடவுளுடைய அழகிய படைப்புக்களாகவே தோற்றம் அளிக்கின்றன. என்னுடைய மனம் எப்போதும் இறைவனைத் தியானித்துக் கொண்டிருப்பதால், தீய சிந்தனைகள் என்னை அணுகுவதில்லை. தியானத்தின் மூலம் துன்பத்துக்கு அப்பாற்பட்ட இன்பத்தை அனுபவிக்கிறேன்.''

## எல்லோரும் பொய்யர்கள்

காந்திஜி வங்காளத்தில் சுற்றுப் பயணம் செய்த போது நவாப்கஞ்ச் நகரத்திலுள்ள ஹரிபாத பாபு தேசிய வித்தியாசாலைக்கு விஜயம் செய்தார். மாணவர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கும் போது, ''நீங்கள் அனைவரும் கதர் அணிந்து கொண்டிருப்பதில் மகிழ்ச்சி. ஆனால் நீங்கள் எப்போதும் மெய் பேசுகிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஆம்!'' என்று அனைவரும் குரல் கொடுத்தார்கள்.

'' எப்போதாவது பொய் பேசுவது உண்டா?'' என்று கேட்டதும், 'ஆம்' என்பதைக் காட்டும் முறையில் இரண்டு மாணவர்கள் உடனே கை உயர்த்தினார்கள். மற்றவர்கள் தயங்கினார்கள். பிறகு ஒவ்வொருவராக அத்தனை பேர்களும் கை உயர்த்தி, ஒப்புதல் கூறினார்கள். ''நீங்கள் இப்போது மெய் பேசியதில் மகிழ்ச்சி அடைகிறேன். பொய் என்பதைத் தெரிந்து கொண்டு, எப்போதாவது பொய் பேசுகிறவர்கள் உய்ய வழியுண்டு. எப்போதும் மெய் பேசுகிறவர்களுக்கு இன்னல்கள் குறுக்கிடும். இருசாராரும் வாழ்க்கையில் வெற்றி பெற வேண்டும்.'' - கே. எஸ். ஜே.



# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

## பத்தொன்பதாம் அத்தியாயம்

## சமய சஞ்சீவி

நம்பியாண்டார் நம்பிக்கு நடந்த உபசாரத்தின்போது பினாகபாணி அந்தச் சபா மண்டபத்துக்குள் பிரவேசிக்க முடியவில்லை. வாசற்படிக்கு அப்பால் நின்ற கூட்டத்தில் நின்று உள்ளே பார்த்துக் கொண்டிருந்தான். வந்தியத்தேவனுடைய கவனம் வேறு இடத்தில் இருந்தது என்பதை முன்னமே பார்த்தோம். பினாகபாணியோ வந்தியத்தேவன் முகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருந்தான். இவ்வளவையும் பார்த்தும் பார்க்காததுபோல் கவனித்துக் கொண்டிருந்தான் இன்னொருவன். அவன்தான் நம் பழைய தோழனாகிய ஆழ்வார்க்கடியான்.

இளவரசர் மதுராந்தகருக்கு நிமித்தம் பார்த்துச் சொல்லி அவர் மனத்தைக் கலக்கி விட்டு வந்தியத்தேவன் அரண்மனைக்கு வெளியில் வந்தான். அங்கே சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்த வைத்தியர் மகன் அவனை நெருங்கி வந்து, "அப்பனே! நீ யார்?" என்று கேட்டான். வந்தியத்தேவன் பினாகபாணியைப் பார்த்துத் திடுக்கிட்டான். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், "என்ன கேட்டாய்?" என்றான்.

"நீ யார் என்று கேட்டேன்."

"நான் யார் என்று கேட்கிறாய்? எந்த நானைக் கேட்கிறாய்? மண், நீர், தேயு, வாயு, ஆகாசம் என்கிற பஞ்ச பூதங்களினாலான இந்த உடம்பைக் கேட்கிறாயா? இந்த உடம்புக்குள் மறைந்திருக்கும் உயிரைக் கேட்கிறாயா? உயிருக்கு ஆதாரமான ஆத்மாவைக் கேட்கிறாயா? ஆத்மாவுக்கு அடிப்படையான பரமாத்மாவைக் கேட்கிறாயா? அப்பனே! இது என்ன கேள்வி? நீயும் இல்லை; நானும் இல்லை. எல்லாம் இறைவன் மயம்! உலகம் என்பது மாயை. பசு, பதி, பாசத்தின் உண்மையைத் திருநாரையூர் நம்பியைப் போன்ற பெரியோர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்!" என்று கூறிவிட்டு வந்தியத்தேவன் அரண்மனை வாசலில் நின்ற தன் குதிரை மேல் தாவி ஏறினான். குதிரையைச் சிறிது நேரம் வேகமாகச் செலுத்திய பிறகு வைத்தியர் மகன் தன்னைப் பின்தொடரவில்லை என்று தெரிந்து கொண்டு மெள்ள மெள்ள விட்டுக் கொண்டு போனான்.

ஆனால் வைத்தியர் மகன் அவ்வளவு எளிதில் ஏமாந்து போகிறவனா? அவனுடைய சந்தேகம் இப்போது நிச்சய

மாகி விட்டது. நகர் காவல் அதிகாரியிடம் சென்று செய்தியைத் தெரிவித்தான். அதிகாரி அனுப்பிய இரண்டு காவல் வீரர்களை அழைத்துக் கொண்டு அவனும் ஊரைச் சுற்றி வந்தான். அவன் எதிர்பார்த்தது போலவே வந்தியத்தேவனை ஒரு நாற்சந்தியில் சந்தித்தான்.

''இவன்தான் ஒற்றன்! இவனைச் சிறைப் பிடியுங்கள்!'' என்று கூவினான்.

''என்னடா, அப்பா! உனக்குப் பைத்தியமா?'' என்றான் வல்லவரையன்.

''யாரைப் பைத்தியமா என்று கேட்கிறாய்? இந்த உடம்பையா, இதற்குள் இருக்கும் உயிரையா, ஆத்மாவையா, பரமாத்மாவையா? அல்லது பசு, பதி, பாசத்தையா?'' என்று கூறினான் வைத்தியர் மகன் பினாகபாணி.

''நீ இப்பொழுது உளறுவதிலிருந்தே நீ பைத்தியம் என்று தெரிகிறதே ?''

''நான் பைத்தியம் இல்லை; உன்னோடு கோடிக்கரைக்கு வந்த வைத்தியன்! காவலர்களே! தஞ்சாவூர்க் கோட்டையிலிருந்து தப்பி இலங்கைக்கு ஓடிய ஒற்றன் இவன்தான்! உடனே இவனைச் சிறைப் பிடியுங்கள்!''

காவலர்கள் வல்லவரையனை நோக்கி நெருங்கினார்கள்.

''ஜாக்கிரதை! இவன் சொல்வதைக் கேட்டுத் தவறு செய்யாதீர்கள்! நான் இளவரசர் மதுராந்தகத் தேவரோடு வந்த நிமித்தக்காரன்!'' என்று கூறினான் வந்தியத் தேவன்.

''இல்லை, இல்லை! இவன் பெரும் பொய்யன். இவனை உடனே சிறைப் படுத்துங்கள்!'' என்று வைத்தியர் மகன் வாய் விட்டுக் கூவினான்.

இதற்குள் அவர்களைச் சுற்றிலும் ஒரு பெருங்கூட்டம் கூடிவிட்டது. கூட்டத்தில் சிலர் வந்தியத் தேவனுடைய கட்சி பேசினார்கள். சிலர் வைத்தியர் மகனின் கட்சி பேசினார்கள்.

''இவனைப் பார்த்தால் நிமித்தக்காரனாகத் தோன்றவில்லை'' என்றான் ஒருவன்.

'' ஒற்றனாகவும் தோன்றவில்லையே ?'' என்றான் இன்னொருவன்.

''நிமித்தக்காரன் இவ்வளவு சிறு பிராயத்தனாயிருக்க முடியுமா?''

''ஏன் முடியாது? ஒற்றன் குதிரை மேலேறி வீதியில் பகிரங்கமாகப் போவானா ?''

''நிமித்தக்காரன் எதற்காக உடைவாள் தரித்திருக்கிறான்?''

''ஒற்றன் என்றால் யாருடைய ஒற்றன்? பழையாறையில் என்ன வேவு பார்ப்பதற்காக வருகிறான்?''

இதற்கிடையில் பினாகபாணி, ''இவனைச் சிறைப் பிடியுங்கள்! உடனே சிறைப் பிடியுங்கள்! பழுவேட்டரையருடைய கட்டளை!'' என்று கத்தினான்.

பழுவேட்டரையர் என்ற பெயரைக் கேட்டதும் அங்கே கூடியிருந்தவர்கள் பலருக்கு வந்தியத் தேவன்மேல் அனுதாபம் உண்டாகிவிட்டது. அவனை எப்படியாவது தப்புவிக்க வழி உண்டா என்று பார்த்தார்கள்.

இதற்கிடையில் ஆழ்வார்க்கடியான் அந்தக் கூட்டத்தின் ஓரத்தில் வந்து சேர்ந்தான். ''இளவரசரோடு வந்த நிமித்தக்காரன் இங்கே இருக்கிறானா?'' என்று கூவினான்.



''இதோ இருக்கிறேன்!'' என்றான் வந்தியத் தேவன்.

''இல்லை; இவன் ஒற்றன்!'' என்று பினாகபாணி கூச்சலிட்டான்.

''இதென்ன வம்பு? நீ மதுராந்தகத் தேவருடன் வந்த நிமித்தக்காரனாயிருந்தால் என்னுடன் வா! உன்னை இளவரசி அழைத்து வரச் சொன்னார்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

வந்தியத்தேவனின் உள்ளம் துள்ளிக் குதித்தது. ''அந்த நிமித்தக்காரன் நான் தான்! இதோ வருகிறேன்!'' என்றான்.

''விடாதீர்கள்! ஒற்றனை விட்டு விடாதீர்கள்!'' என்று வைத்தியர் மகன் பினாகபாணி கத்தினான்.

ஆழ்வார்க்கடியான், ''நீ நிமித்தக்காரன்தானா என்பதை நிரூபித்து விடு! அப்படியானால்தான் என்னுடன் வரலாம்!'' என்று கூறிக் கொண்டே கண்ணால் சமிக்ஞை செய்தான்.

''என்ன விதமாக நிரூபிக்கச் சொல்லுகிறாய்?'' என்று வந்தியத்தேவன் அவசரத்துடன் கேட்டான்.

''அதோ இரண்டு குதிரைகள் வேகமாக வருகின்றனவல்லவா? அவற்றின் மீது வருகிறவர்கள் ஏதோ அவசரச் செய்தி கொண்டு வருவதாகத் தோன்றுகிறது. அது உண்மையாயிருந்தால், அவர்கள் என்ன செய்தி கொண்டு வருகிறார்கள், சொல்!''

குதிரைகளின் பேரில் வந்தவர்களை வந்தியத்தேவன் உற்றுப் பார்த்து விட்டு, ''ஓ! சொல்லுகிறேன். இராஜ குடும்பத்தைச் சேர்ந்த ஒருவருக்கு ஜல கண்ட விபத்து நேர்ந்திருக்கிறது! அந்தத் துக்கச் செய்தியைத்தான் அவர்கள் கொண்டு வருகிறார்கள்!'' என்றான்.

இப்படிச் சொல்லி வாய் மூடுவதற்குள் குதிரைகள் ஜனக் கூட்டத்தை நெருங்கி விட்டன. ஜனங்கள் மேலே போக வழி விடாதபடியால் குதிரைகள் நின்றன.

''நீங்கள் தூதர்கள் போலிருக்கிறது. என்ன செய்தி கொண்டு வருகிறீர்கள்?'' என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

''ஆம், நாங்கள் தூதர்கள்தான்! துக்கச் செய்தி கொண்டு வருகிறோம்! இளவரசர் அருள்மொழி வர்மர் ஏறி வந்த கப்பல் சுழற் காற்றில் அகப்பட்டுக் கொண்டதாம். இளவரசர் யாரையோ காப்பாற்றுவதற்காகக் கடலில் குதித்து முழுகிப் போய் விட்டாராம்!''

குதிரை மீது வந்தவர்களில் ஒருவன் இவ்வாறு கூறியதும் அந்த ஜனக் கூட்டத்தில், ''ஐயோ!'' ''ஐயகோ!'' என்ற பரிதாபக் குரல்கள் நெஞ்சைப்



பிளக்கும்படியான சோகத் தொனியில் எழுந்தன.

எங்கிருந்துதான் அவ்வளவு ஜனங்களும் வந்தார்களோ, தெரியாது. அவ்வளவு சீக்கிரத்தில் அவர்கள் எப்படி வந்து சேர்ந்தார்கள் என்றும் சொல்ல முடியாது. ஆண்களும், பெண்களும் வயோதிகர்களும், சிறுவர் சிறுமியரும் அந்தத் தூதர்களைப் பெருங்கூட்டமாகச் சூழ்ந்து கொண்டார்கள். பலர் அவர்களைப் பல கேள்விகள் கேட்டார்கள். பலர் அழுது புலம்பினார்கள்.

பழுவேட்டரையர்கள் அருள்மொழி வர்மரை விரும்பவில்லை என்பது அந்நகர மக்களில் பலருக்கு ஏற்கனவே தெரியும். இளவரசரைச் சிறைப்படுத்திக் கொண்டு வருவதற்காகப் பழுவேட்டரையர்கள் ஈழத்துக்கு ஆள் அனுப்பியிருக்கிறார்கள் என்ற பிரஸ்தாபமும் அவர்கள் காதுக்கு எட்டியிருந்தது. எனவே, கூட்டத்தில் பலர் பழுவேட்டரையர்களைப் பற்றி முதலில் முணுமுணுக்கத் தொடங்கினார்கள். பிறகு உரத்த குரலில் சபிக்கவும் தொடங்கினார்கள். ''பழுவேட்டரையர்கள் வேண்டுமென்றே இளவரசரைக் கடலில் மூழ்க அடித்துக் கொன்றிருக்க வேண்டும்!'' என்றும் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள். அந்த ஜனக் கூட்டத்தார் பேசிக் கொண்ட சத்தமும் அவர்கள் புலம்பிய சத்தமும் பழுவேட்டரையர்களைச் சபித்த சத்தமும் சேர்ந்து சமுத்திரத்தின் பேரிரைச்சலைப் போல் எழுந்தது.

இந்தக் கூட்டத்துக்கு மத்தியில் அகப்பட்டுக்கொண்ட கஞ்சாவூர்த் தூதர்கள் மேலே அரண்மனைக்குப் போக முடியாமல் தவித்தார்கள். ஜனங்களை விலக்கிக் கொண்டு போக அவர்கள் முயன்றும் பலிக்கவில்லை. ''எப்படி?'' ''எங்கே?'' ''என்றைக்கு?'' ''நிச்சயமாகவா?'' என்றெல்லாம் ஜனங்கள் அத்தூதர்களைக் கேட்டவண்ணம் மேலே போக முடியாதபடி தடை செய்தார்கள்.

வைத்தியர் மகனுடன் வந்திருந்த காவலர்களைப் பார்த்து ஆழ்வார்க்கடியான், ''நீங்கள் ஏன் சும்மா நிற்கிறீர்கள்? கூட்டத்தை விலக்கித் தூதர்களை அரண்மனைக்கு அழைத்துச் செல்லுங்கள்!'' என்றான். காவலர்களும் மேற்படி செய்தி கேட்டுக் கதிகலங்கிப் போயிருந்தார்கள். அவர்கள் இப்போது முன்வந்து தூதர்களுக்கு வழி விலக்கிக் கொடுக்க முயன்றார்கள். தூதர்கள் சிறிது சிறிதாக அரண்மனையை நோக்கி முன்னேறினார்கள். ஜனக் கூட்டமும் அவர்களை விடாமல் தொடர்ந்து சென்றது. மேலும் மேலும் ஜனங்களின் கூட்டம் பெருகிக் கொண்டும் வந்தது.

அவ்வளவு பெரிய ஜனக் கூட்டத்தில், ஒரே மனதாக இளவரசர் அருள்மொழி வர்மரின் கதியை நினைத்துக் கலங்கிப் புலம்பிக் கொண்டிருந்த கூட்டத்தில், ஒரே ஒரு பிராணி மட்டும், ''ஐயோ! இது ஏதோ சூழ்ச்சி! ஒற்றனைத் தப்பித்துவிடச் சூழ்ச்சி!'' என்று அலறிக் கொண்டிருந்தது. அவ்வாறு அலறிய வைத்தியர் மகனை யாரும் பொருட்படுத்தவில்லை. அவனுடைய கூக்குரல் யாருடைய செவியிலும் ஏறவில்லை. மாநதியின் பெருவெள்ளம் அதில் விழுந்துவிட்ட சிறு துரும்பை அடித்துக் கொண்டு போவது போல் அந்தப் பெரும் ஜனக் கூட்டம் வைத்தியர் மகனையும் தள்ளிக் கொண்டு முன்னே சென்றது.

ஜனக் கூட்டம் சேரத் தொடங்கிய போதே வந்தியத்தேவன் குதிரை மேலிருந்து இறங்கி விட்டான். கூட்டம் நகரத் தொடங்கியபோது ஆழ்வார்க்கடியான் அவன் அருகில் வந்து அவன் கையைப் பற்றிக் கொண்டான். ''குதிரையை விட்டுவிடு! பிறகு அதைத் தேடிப் பிடித்துக் கொள்ளலாம். உடனே என்னுடன் வா!'' என்று அவன் காதோடு சொன்னான்.

''அப்பனே! சமய சஞ்சீவியாக வந்து சேர்ந்தாய்! இல்லாவிடில் என் நிலைமை என்ன ஆகியிருக்குமோ, தெரியாது!'' என்றான் வல்லவரையன்.

''இதுதான் உன் தொழில் ஆயிற்றே? நீ சங்கடத்தில் அகப்பட்டுக் கொள்ள வேண்டியது; யாராவது வந்து உன்னை அந்த நெருக்கடியிலிருந்து விடுவிக்க வேண்டியது!'' என்று எகத்தாளம் செய்தான் ஆழ்வார்க்கடியான்.

இருவரும் ஜனக்கூட்டம் அவர்களைத் தள்ளிக் கொண்டு போகாதவண்ணம் வீதி ஓரமாக ஒதுங்கி நின்றார்கள். கூட்டம் போன பிறகு வந்தியத்தேவனுடைய கையை ஆழ்வார்க்கடியான் பற்றிக் கொண்டு வேறு திசையாக அவனை அழைத்துச் சென்றான்.

அரண்மனைகள் இருந்த வீதியில் முன்னொரு தடவை நாம் பார்த்திருக்கும் பூட்டிக் கிடந்த கொடி வீட்டில் அவர்கள் புகுந்தார்கள். கொல்லைப் புறத்தில் இருந்த நந்தவனத்தில் பிரவேசித்துக் கொடி வழிகளில் நடந்தார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் நீல நிற ஓடை தெரிந்தது. அதில் ஓர் ஓடம் மிதந்தது. ஓடத்தில் ஒரு மாதரசி இருந்தாள். அவளைக் கண்டதும் வந்தியத் தேவனுடைய உள்ளம் துள்ளிக் குதித்தது.

## இருபதாம் அத்தியாயம்

# தாயும் மகனும்

அன்னை அழைத்துவரச் சொன்னதாகச் சேவகன் வந்து கூறியதன் பேரில் மதுராந்தகன் செம்பியன் மாதேவியைப் பார்க்கச் சென்றான். சிவ பக்தியிற் சிறந்த அந்த மூதாட்டியின் புகழ் நாடெங்கும் பரவியிருந்தது. ஒரு காலத்தில் மதுராந்தகனும் அன்னையிடம் அளவிலாத பக்தி கொண்டிருந்தான். இப்போது அந்தப் பக்தி கோப வெறியாக மாறிப் போயிருந்தது. பெற்ற மகனுக்குத் துரோகம் செய்து தாயாதிகளின் கட்சி பேசிய தாயைப் பற்றிக் கதைகளிலேகூடக் கேட்டதில்லையே! தனக்கு இப்படிப்பட்ட அன்னையா வந்து வாய்க்க வேண்டும்?... இதை நினைக்க நினைக்க அவன் உள்ளத்திலிருந்து அன்பு அத்தனையும் துவேஷமாகவே மாறி நாளடைவில் கொழுந்து விட்டு வளர்ந்திருந்தது.

அபூர்வமான சாந்தம் குடிகொண்ட அன்னையின் முகத்தைப் பார்த்ததும் கொஞ்சம் அவனுடைய கோபம் தணிந்தது. பழைய வழக்கத்தை அனுசரித்து நமஸ்கரித்து எழுந்து நின்றான். "சிவ பக்திச் செல்வம் பெருகி வளரட்டும்!" என்று மகாராணி ஆசி கூறி அவனை ஆசனத்தில் உட்காரச் செய்தார்.

அந்த ஆசீர்வாதம் மதுராந்தகனுடைய மனத்தில் அம்பைப்போல் தைத்தது.

"மதுராந்தகா! என் மருமகள் சுகமா? உன் மாமனார் வீட்டிலும் தனாதிகாரியின் வீட்டிலும் எல்லாரும் சௌக்கியமா?" என்று அன்னை கேட்டார்.

"எல்லாரும் சௌக்கியமாகவே இருக்கிறார்கள். அதைப் பற்றித் தங்களுக்கு என்ன கவலை?" என்று குமாரன் முணுமுணுத்தான்.

"தஞ்சையிலிருந்து புறப்படுவதற்கு முன்னால் நீ சக்கரவர்த்தியைப் பார்த்தாயா? அவருடைய உடல் நலம் தற்சமயம் எப்படி இருக்கிறது?" என்று மகாராணி கேட்டார்.

"பார்த்து விடைபெற்றுக் கொண்டுதான் புறப்பட்டேன். சக்கரவர்த்தியின் உடம்பு நாளுக்குநாள் நலிந்துதான் வருகிறது. உடல் வேதனையைக் காட்டிலும் மன வேதனை அவருக்கு அதிகமாயிருக்கிறது!" என்றான் மதுராந்தகன்.

"அது என்ன, குழந்தாய்? சக்கரவர்த்தி மன வேதனைப்படும்படியாக என்ன நேர்ந்தது?"

"குற்றம் செய்தவர்கள், — அநீதி செய்தவர்கள், — பிறர் உடைமையைப் பறித்து அநுபவிக்கிறவர்கள், — மன வேதனை கொள்வது இயல்புதானே?"

"இது என்ன சொல்கிறாய்? சக்கரவர்த்தி அவ்வாறு என்ன குற்றம், அநீதி, — செய்து விட்டார்?"

"வேறு என்ன செய்ய வேண்டும்? நான் இருக்க வேண்டிய சிம்மாசனத்தில் அவர் இத்தனை வருஷங்களாக அமர்ந்திருப்பது போதாதா? அது குற்றம் இல்லையா? அநீதி இல்லையா?"

"குழந்தாய்! பால்போலத் தூய்மையாக இருந்த உன் உள்ளத்தில் இந்த விஷம் எப்படி வந்தது? யார் உனக்குத் துர்ப்போதனை செய்து கெடுத்துவிட்டார்கள்?" என்று இரக்கமான குரலில் அன்னை கேட்டார்.

"எனக்கு ஒருவரும் துர்ப் போதனை செய்து கெடுக்கவில்லை. தங்கள் மகனை அவ்வளவு நிர்மூடனாக ஏன் கருதுகிறீர்கள்? எனக்குச் சுய அறிவே கிடையாது என்பது தங்கள் எண்ணமா?"

"எத்தனை அறிவாளிகளாயிருந்தாலும் துர்ப் போதனையினால் மனம் கெடுவது உண்டு. கரைப்பவர்கள் கரைத்தால் கல்லும் கரையும் அல்லவா? கூனியின் துர்ப்போதனையினால் கைகேயியின் மனம் கெட்டுப் போகவில்லையா?"

"பெண்களின் மனத்தை அப்படித் துர்ப்போதனையினால் கெடுத்து விடலாம் என்பதை நானும் தெரிந்து கொண்டுதானிருக்கிறேன்."

"மதுராந்தகா! யாரைக் குறிப்பிட்டுச் சொல்கிறாய்?"

"தாயே! என்னை எதற்காக அழைத்தீர்கள்? அதைச் சொல்லுங்கள்!"

"சற்றுமுன் நடந்த வைபவத்தில் நீ பிரசன்னமாயிருந்தாய் அல்லவா?"

"இருந்தேன். யாரோ வழியோடு போகிற சிறுவனைப் பல்லக்கிலேற்றி அழைத்து வரச் செய்தீர்கள். சிம்மாசனத்தில் ஏற்றி வைத்து உபசரித்தீர்கள். அவன் தலை கால் தெரியாத கர்வம் கொண்டிருப்பான்....."

"ஐயோ! அப்படி அபசாரமாய்ப் பேசாதே, குழந்தாய்! வந்திருந்தவர் வயதில் வாலிபரானாலும் சிவஞான பரிபக்குவம் அடைந்த மகான்...."

"அவர் மகானாகவே இருக்கட்டும். நான் குறைத்துப் பேசினால் அவருடைய பெருமை குறைந்து விடாதல்லவா? அந்த மகானுக்குத் தாங்கள் இராஜரீக மரியாதைகள் செய்ததையும் நான் ஆட்சேபிக்கவில்லை. என்னை எதற்காக அழைத்தீர்கள் என்று சொல்லுங்கள்!"

செம்பியன்மாதேவி ஒரு நெடிய பெருமூச்சு விட்டார். பிறகு கூறினார் :—

''உன்னுடைய குணத்தில் ஏற்பட்டிருக்கும் மாறுதல் எனக்குப் பிரமிப்பை உண்டாக்குகிறது. பழுவேட்டரையர் மாளிகையில் இரண்டு வருஷ வாசம் இப்படி உன்னை மாற்றிவிடும் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. போனால் போகட்டும். என்னுடைய கடமையை நான் செய்ய வேண்டும். உன் தந்தைக்கு நான் அளித்த வாக்குறுதியை நிறைவேற்ற என்னாலியன்ற வரையில் முயல வேண்டும். மகனே! உன்னை அழைத்த காரியத்தைச் சொல்வதற்கு முன்னால், என்னுடைய கதையை, — நான் உன் தந்தையை மணந்த வரலாற்றைக் கூற வேண்டும். சற்றுப் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிரு!''

மதுராந்தகன் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருக்கப் போவதற்கு அறிகுறியாகக் கால்களை மண்டி போட்டுக் கொண்டு கைகளைப் பீடத்தில் நன்றாய் ஊன்றிக் கொண்டு உட்கார்ந்தான்.

''நான் பிறந்த ஊராகிய மழபாடிக்கு நீ குழந்தையாயிருந்த போது இரண்டொரு தடவை வந்திருக்கிறாய். அந்த ஊரில் உள்ள சிவபெருமான் ஆலயத்தையும் பார்த்திருக்கிறாய். கோச்செங்கட் சோழ மன்னர் சிவாலயம் எடுப்பித்த அறுபத்து நாலு ஸ்தலங்களில் அதுவும் ஒன்று எனப் பெரியோர்கள் சொல்லிக் கேட்டிருக்கிறேன். உன்னுடைய பாட்டனார், என்னுடைய தந்தை, மழபாடியில் பெரிய குடித்தனக்காரர். எங்கள் குலம் தொன்மையானது. ஒரு காலத்தில் மழவரையர்கள் செல்வாக்குப் பெற்ற சிற்றரசர்களாயிருந்தார்கள். விஜயாலய சோழர் காலத்தில் நடந்த யுத்தங்களில் பாண்டியர்களோடு சேர்ந்திருந்தார்கள். அதனால் சோழர்கள் வெற்றி பெற்றபிறகு மழவரையர்களின் செல்வாக்குக் குன்றியிருந்தது. சிறு பெண்ணாயிருந்த போது அதைப் பற்றியெல்லாம் நான் குறைப்படவில்லை. என் உள்ளம் மழபாடி ஆலயத்தில் உள்ள நடராஜப் பெருமான் மீது சென்றிருந்தது. மழபாடியின் சரித்திரத்தில் நிகழ்ந்த ஒரு வரலாற்றை ஒரு பெரியவர் நான் குழந்தையாயிருந்த போது எனக்குச் சொன்னார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமது சீடர்களுடனே எங்களூர்ப் பக்கமாகப் போய்க் கொண்டிருந்தார். மழபாடி சிவாலயத்தைச் சுற்றிச் செழித்து வளர்ந்து கொத்துக் கொத்தாகப் பூத்துக் குலுங்கிய கொன்னை மரங்கள் ஆலயத்தை மறைத்திருந்தனவாம். ஆகையால் கோயிலைக் கவனியாமல் சுந்தரர் சென்றாராம். 'சுந்தரம்! என்னை மறந்தாயோ!' என்ற குரல் அவர் காதில் கேட்டதாம். சுந்தரர் சுற்றுமுற்றும் பார்த்து, 'யாராவது ஏதேனும் சொன்னீர்களா ?' என்று கேட்டாராம். சீடர்கள் இல்லை என்றார்களாம். தங்கள் காதில் குரல் எதுவும் கேட்கவில்லை என்றும் சொன்னார்களாம். சுந்தரர் உடனே அருகில் ஏதாவது ஆலயம் மறைந்திருக்கிறதா என்று விசாரித்தாராம். கொன்னை மரங்களுக்கிடையில் மறைந்திருந்த மழபாடி திருக்கோயிலைக் கண்டுபிடித்து ஓடி வந்து இறைவன் சந்நிதியில் 'பொன்னார் மேனியனே!' என்ற பதிகத்தைப் பாடினாராம். இந்த வரலாற்றைக் கேட்டது முதற்கொண்டு,

மன்னே! மாமணியே!
மழபாடியுள் மாணிக்கமே!
அன்னே உன்னையல்லால்
இனி யாரை நினைக்கேனே!

என்ற வரிகள் என் மனத்தில் பதிந்து விட்டன. கோயிலுக்கு அடிக்கடி போவேன். நடராஜமூர்த்தியின் முன்னால் நின்று அந்த வரிகளை ஓயாது சொல்லுவேன். நாளாக ஆக, என் உள்ளத்தில் மழபாடி இறைவர் குடிகொண்டு விட்டார். சிவபெருமானையே நான் மணந்துகொள்ளப் போவதாக மனக் கோட்டை கட்டினேன். என்னை நான் உமையாகவும், பார்வதியாகவும், தாட்சாயணியாகவும் எண்ணிக் கொள்வேன். அவர்கள் சிவபெருமானைப் பதியாக அடைவதற்குத் தவம் செய்தது போல் நானும் கண்ணை மூடிக் கொண்டு தவம் செய்வேன். யாராவது என் கல்யாணத்தைப் பற்றிய பேச்சு எடுத்தால் வெறுப்பு அடைவேன். இவ்விதம் என் குழந்தைப் பருவம் சென்றது. மங்கைப் பருவத்தை அடைந்த போது என் உள்ளம் சிவபெருமானுடைய பக்தியில் முன்னைவிட அதிகமாக ஈடுபட்டது. வீட்டாரும் ஊராரும் என்னைப் 'பிச்சி' என்று சொல்ல ஆரம்பித்தார்கள். அதையெல்லாம் நான் பொருட்படுத்தவேயில்லை. வீட்டில் உண்டு உறங்கிய நேரம் போக மிச்சப் பொழுதையெல்லாம் கோவிலிலேயே கழித்தேன். பூஜைக்குரிய மலர்களைப் பறித்து விதம் விதமான மாலைகளைத் தொடுத்து நடராஜப் பெருமானுக்கு அணியச் செய்து பார்த்து மகிழ்வேன். நெடுநேரம் கண்ணை மூடிக் கொண்டு தியானத்தில் ஆழ்ந்திருப்பேன். இவ்விதம் ஒருநாள் கண்ணை மூடிக்கொண்டு மனத்தில் இறைவனையே தியானித்துக் கொண்டிருந்த போது திடீரென்று கலகலவென்று சத்தம் கேட்டுக் கண் விழித்துப் பார்த்தேன். என் எதிரே ஐந்தாறு

## உடம்பு வலியிலிருந்து விரைவில் குணமடைந்தேன்!

# அமிர்தாஞ்சனம்

## மிக உதவியது




அமிர்தாஞ்சனம் உடம்புவலி, ஜலதோஷம், தலைவலி, சுளுக்கு இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள்.
75 வருடங்களாக குடும்பங்களில் பயன்பட்டுவரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம். எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். அது சிக்கனமான ஜாடிகளிலும், கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கிறது.

**10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி**

அமிர்தாஞ்சன் லிமிடெட், சென்னை - பம்பாய் - கல்கத்தா - புதுடில்லி - ஹைதராபாத் - பெங்களூர்

AM-5433

பேர் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களில் முன்னால் நின்ற ஒருவர் மீதுதான் என் கண்களும் கருத்தும் சென்றன. நான் மனத்தில் தியானித்துக் கொண்டிருந்த சிவபெருமான் தாமே தம் பரிவாரங்களுடன் என்னை ஆட்கொள்ள வந்து விட்டார் என்று எண்ணிக் கொண்டேன். எழுந்து நின்று தலை குனிந்து வணங்கி நின்றேன். என் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பொழிந்தது. இதை அவர் கவனித்திருக்க வேண்டும். 'இந்தப் பெண் யார்? இவள் ஏன் கண்ணீர் விட்டு அழுகிறாள்?' என்று ஒரு குரல் கேட்டது. அதற்கு என் தந்தையின் குரல், 'இவள் என் மகள். பிஞ்சிலே பழுத்தவளைப் போல் இவளுக்கு இப்போதே சிவபக்தி வந்து விட்டது. ஓயாமல் இப்படிக் கோவிலில் வந்து உட்கார்ந்து கண்ணை மூடிக் கொண்டு தியானம் செய்வதும் பதிகம் பாடுவதும் கண்ணீர் விடுவதுமாயிருக்கிறாள்!' என்று கூறிய மறுமொழி என் காதில் விழுந்தது. மறுபடியும் நான் நிமிர்ந்து பார்த்தபோது முன்னால் நின்றவர் சிவபெருமான் இல்லை யென்றும் யாரோ அரச குலத்தவர் என்றும் தெரிந்து கொண்டேன். எனக்கு அவமானம் தாங்கவில்லை. அங்கிருந்து ஒரே ஓட்டமாக ஓடிப்போய் வீட்டை அடைந்தேன். ஆனால் என்னை ஆட்கொண்டவர் என்னை விடவில்லை. என் தந்தையுடன் எங்கள் வீட்டுக்கே வந்து விட்டார். மகனே! அவர்தாம் என் கணவரும் உன் அருமைத் தந்தையுமாகிய கண்டராதித்த தேவர்!''

இவ்விதம் கூறிவிட்டுப் பெரிய மகாராணி சிறிது நிறுத்தினார். பழைய நினைவுகள் அவருடைய கண்களில் மீண்டும் கண்ணீர்த் துளிகளை வருவித்தன. கண்ணைத் துடைத்துக் கொண்டு மறுபடியும் கூறினார் :

''பிறகு உன் தந்தையைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டேன். அவர் சிறிது காலத்துக்கு முன்புதான் சோழ நாட்டின் சிம்மாசனத்தில் அமர்ந்தார். அது முதல் பற்பல சிவஸ்தலங்களுக்கும் சென்று ஆலய தரிசனம் செய்து வந்தார். அவருக்குப் பிராயம் அப்போது நாற்பதாகி யிருந்தது. இளம் வயதில் அவர் மணந்து கொண்டிருந்த மாதரசி காலமாகி விட்டாள். மறுபடியும் கலியாணம் செய்துகொள்ளும் எண்ணமே அவருக்கு இருக்கவில்லை. மீண்டும் மணம் புரிந்து கொள்வதில்லை யென்று விரதம் கொண்டிருந்தார். ஆனால் அவருடைய புனித உள்ளம் இந்தப் பேதையைக் கண்டதினால் சலனமடைந்தது. என் தந்தையின் முன்னிலையில் என் விருப்பத்தை அவர் கேட்டார். நானோ, சிவபெருமானே மனித உருவங் கொண்டு என்னை ஆட்கொள்ள வந்திருப்பதாக எண்ணிப் பரவசம் கொண்டிருந்தேன். அவரை மணந்து கொள்ளப் பூரண சம்மதம் என்பதைத் தெரிவித்தேன். எங்களுக்கு விரைவில் திருமணம் நடந்தது. அதன் பயனாக உன் பாட்டனார் இழந்திருந்த செல்வாக்கை மீண்டும் அடைந்து 'மழவரையர்' என்ற பட்டப் பெயரையும் பெற்றார்.....

''மகனே! எனக்கும் உன் தந்தைக்கும் திருமணம் நடந்தபிறகு நாங்கள் இருவரும் மனம் விட்டுப் பேசி ஒரு முடிவுக்கு வந்தோம். சிவபெருமானுடைய திருப்பணிக்கே எங்களுடைய வாழ்க்கையை அர்ப்பணம் செய்வது என்றும், இருவரும் மகப்பேற்றை விரும்புவதில்லை என்றும் தீர்மானித்திருந்தோம். அதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது. குழந்தாய்! இதையெல்லாம் உன்னிடம் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்படும் என்று நான் கனவிலும் கருதவில்லை. ஆயினும் அத்தகைய அவசியம் நேர்ந்துவிட்டதனால் சொல்லுகிறேன். கொஞ்சம் செவி கொடுத்துக் கவனமாகக் கேள்!''

இவ்விதம் செம்பியன்மாதேவி கூறி மீண்டும் ஒரு நெடுமூச்சு விட்டார். மதுராந்தகனும் முன்னைக் காட்டிலும் அதிக சிரத்தையுடன் காது கொடுத்துக் கேட்கத் தொடங்கினான். (தொடரும்)

---

## பறக்கும் ரயில்!

தரையில் ஓடும் ரயிலைத்தான் நாம் பார்த்திருக்கிறோம். பறக்கும் ரயிலைப் பார்த்ததில்லை யல்லவா? பிரான்சில் இது சமீபத்தில் சோதிக்கப்பட்டது. தரையிலிருந்து பதினாறு அங்குலம் உயரமுள்ள 'ஒரு காற்றுப் படுகையின் மேல் விரையும் இது. மணிக்கு 186 மைல் வேகத்தில் ஓடுமாம். என்பது பிரயாணிகள் இதில் பிரயாணம் செய்யலாம்!

தகவல்: மோகன். ஆதாரம்: லைஃப் டைஜஸ்ட்.



□□□ 20—1—70 முதல் 24—1—70 வரை சென்னையில் 'நிலாக் கல்' காட்சிக்கு வைக்கப்படுகிறது.





# உலாவரும் நிலாக்கல்!

அம்புலித் தரையிலிருந்து பெயர்த்து எடுத்து வந்த நிலாக்கல் ஒன்று, தற்போது இந்தியாவில் காட்சிக்காக உலா வந்துகொண் டிருக்கிறது. புதுதில்லி, சென்னை, பம்பாய், கல்கத்தா உள்ளிட்ட இந்தியப் பெருநகரங்கள் ஏழில் ஒரு மாத காலம் காட்சிக்கு வைக்கப்பட் டிருக்கும். குறுகிய கால வரம்புக்குள் புதுதில்லியில் மட்டும் இந்த நிலாக் கல்லைக் காண வந்தவர்களின் எண்ணிக்கை ஐம்பதினாயிரத்துக்கும் அதிகமாக இருக்கும்! ஆம்! அம்புலிக் கல் காட்சிக்கு வைக்கப்பட் டிருந்த அமெரிக்கச் செய்தி அலுவலகத்தைச் சுற்றி நாள்தோறும், அப்படி யொரு நம்ப முடியாத அளவுக்கு மக்கள் பெரு வெள்ளம்!

புதுதில்லியில் இந்த நிலாக்கல் கண்காட்சியைத் தொடங்கி வைத்தவர் அமெரிக்கத் தூதர் கென்னத் கீட்டிங். அப்போது அவர் சொன்னார்: "நிலா உலகிலிருந்து எடுத்து வரப்பட்ட "வாதாம் கொட்டை" (Walnut) அளவுள்ள இந்த அம்புலிக்கல், 11-வது அப்போலோ விமானிகள் தங்களுடன் பூமிக்குக் கொண்டுவந்த "சந்திர நிலச் சொத்தின் ஒரு துண்டு."

சந்திரனிலிருந்து விண்வெளி வீரர்களால் கொண்டுவரப்பட்ட மற்றக் கற்க



1. மூன்று அப்போலோ-11 விண்வெளி வீரர்கள் தாங்கள் நிலாவிலிருந்து கொணர்ந்த கல்லைப் பார்வையிடுகின்றனர்.

2. அமெரிக்காவில் பணியாற்றும் இந்திய விஞ்ஞானி திரு வி. ராமமூர்த்தி நிலாக் கல்லை ஆராய்கிறார்.

3. நிலாக் கல்லின் தோற்றம்.

ளுடன் ஒப்பிடும்போது, இந்தியாவில் காட்சிக்கு வைக்கப்பட்டு வரும் இக்கல் பெருமளவு விசேஷம் வாய்ந்தது. எப்படியெனில், இந்நிலாக்கல் சந்திரனின் தரைமட்டத்தைப் பிரத்தியட்சமாக எதிரொலிக்கிறது என்பதுடன், சந்திரனின் தரை மட்டத்தில் காணும் தூசிப் படிவு, பளபளப்பு ஆகிய அம்சத்தையும் இந்தக் கல்லின் தோற்றத்தில் காண முடிகிறது.

நிலா உலகின் நிதர்சனத் தன்மையை, இந்நிலவுலகுக்கு நிச்சயப்படுத்தும் ஒரு சான்றே இந்த நிலாக்கல்! 'கல்லுக்குக் கல்லாய், மண்ணுக்கு மண்ணாய் மாயமிகு பளபளப்புடன், பார்ப்பவர்களின் மனத்தைக் கவரும் அந்த அம்புலிக் கல்லின் அமைப்பழகை அனுபவித்தவர்களே அறிய முடியும்' என்கிறார் டாக்டர் தேவேந்திரலால் என்கிற விஞ்ஞானி. அவர் பம்பாயில் உள்ள டாட்டா விஞ்ஞான ஆராய்ச்சிக் கழகத்தின் பூபௌதிகக் குழுவின் தலைவராவார். டாக்டர் லால் அமெரிக்காவில் எட்டு மாத காலம் வான வெளி ஆராய்ச்சிப் பணிகளில் ஈடுபட்டிருந்துவிட்டு இப்பொழுதுதான் இந்தியா திரும்பியுள்ளார். ஸாண்டியாகோவில் கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் டாக்டர் லால் இவ்வாறு பணியாற்றச் சேர்ந்தபொழுது, நிலாக் கற்களை நெருங்கிப் பரிசோதிக்கும் அரிய வாய்ப்பு அவருக்குக் கிட்டியது. புதுதில்லியில் நடைபெற்ற நிலாக் கண்காட்சி தொடக்க நாளில் தம்முடைய அனுபவங்களைப் பற்றி அவர் சிறப்புரை ஒன்று நிகழ்த்தினார். வானவெளிப் பயண ஆராய்ச்சி குறித்து டாக்டர் லால் சொன்னார்:

வானவெளியில் இரண்டு வித அபாயங்கள் உண்டு. ஒன்று, கதிரியக்க வெம்மை வீச்சு, அடுத்து, எரிதழலென விளங்கும் எரிகற்களின் கூட்டம்! விஞ்ஞான ரீதியில் இந்த இரண்டு அம்சங்களும் முக்கியமானவை என்பதோடு, சுவாரசியமானவையும்கூட என்கிறார் டாக்டர் லால்.

அபாயங்களுக்குத் துணிந்து நடக்கும் வானவெளி ஆராய்ச்சித் திட்டப் பணிகளின் ஆதாயம், பல்வேறு நாடுகள் பல்வேறு துறைகளில் முன்னேற உதவுகிறது. குறிப்பாக, செய்திப் போக்குவரத்து, வானிலை, விவசாயம் போன்ற அத்தியாவசியமான அமைப்புக்களில், ஆக்கபூர்வமான பணிகளின் வளர்ச்சிக்கு விண்வெளி விஞ்ஞான விந்தைக் கண்டுபிடிப்புகள் பெருமளவு ஜீவசக்தியை வழங்குகின்றன.

நிலாக் கல்லைப் பார்த்ததும் ஓர் உண்மை தெளிந்தோம்! பளபளக்கும் பச்சைப் பாலாடைக் கட்டித் துண்டம் போல் தோற்றம் அளிக்கும் இதுதான் பெருமளவில் நிலா உலகமாகி நின்று ஒளியைப் பிரதிபலித்து நம்மை மகிழ்விக்கிறது என்பதே அது!

— ஏ. ஆர். ராஜாமணி









இங்குள்ள ஐந்து படங்களுக்கு இடையிலும் ஓர் ஒற்றுமை இருக்கிறது. அது என்ன என்று கண்டு பிடியுங்கள், பார்க்கலாம்.

விடை : 33-ம் பக்கம்



# ரகுபதி ராகவ

# மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

## 14

உலகத்தில் தீமை இருப்பதற்கு ஆண்டவனே காரணமும் பொறுப்பும் என்று எண்ணும்போது அது கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆனால் சுகத்துக்கும் சந்தோஷத்துக்கும் அவன் காரணமாக இருந்தால் துன்பத்துக்கும் தீமைக்கும் அவன்தானே காரணம். ராவணனுடைய ராக்ஷஸ பலமும் ஆண்டவன் அனுமதித்துத்தானே வளர்ந்தது. அறியக்கூடாத ஒரு பொருளை அறிந்ததாக விவகரிப்பதால் மனத்தில் குழப்பம் உண்டாவது இயற்கை. கடவுளை நம்மைப் போன்ற ஒரு மனிதனாக எண்ணிப் பேசுகிறோம். அப்போது இவ்வாறான பல கேள்விகள் கிளம்புகின்றன. ஈசுவரனுடைய தன்மையாவது, குணங்களையாவது நாம் கண்டு உணர்ந்து உரைக்க முடியாது. அவனே நியதியை அமைப்பவன். அவனே நியதி. அவனே அதை நிறைவேற்றுபவன். இவ்வளவும் ஒரு தனி மனிதன் வகிக்க முடியாதல்லவா? வகித்தால் அவனைக் கொடுங்கோலன் என்றல்லவா சொல்லுவோம். ஆனால் இவற்றை வகிக்கக் கூடியவன் ஈசுவரன் ஒருவனே. (ஹரிஜன் 24-2-46)

நன்மை தீமை இரண்டுக்கும் மூலம் ஆவான் ஈசன். கொலை செய்யும் கத்தியும், நோயைத் தீர்க்கும் ரண வைத்தியன் கத்தியும் இரண்டும் அவனுடைய கருவிகளே. நன்மை தீமை இரண்டுமே அவனுடைய உபாயங்கள். ஆயினும் நமக்குள் அவ்வாறு இரண்டையும் ஒன்றாக்கிக் கொள்ள முடியாது. மக்களின் காரியங்களில் நன்மை வேறு, தீமை வேறு; ஒன்று மற்றொன்றாகாது. இருளும் ஒளியும் போல ஒன்றுக்கொன்று எதிரிடையாக நிற்கும். (ஹரிஜன் 20-2-37)

என்னைப் பொறுத்தமட்டில் பரம் பொருளை நம்மைப் போன்ற ஒரு பிறவியாக நான் கருதவில்லை. சத்தியமே எனக்குத் தெய்வம். நியதி வேறு நியந்தா வேறு என்று நான் எண்ணவில்லை. மனிதர்களுக்குள் அரசன் வேறு, அரசனுடைய சட்டம் வேறு. ஈசனைப் பற்றி அவ்வாறு பிரிப்பதற்கில்லை. அவனே அரசனும், அவனே சட்டமும். நம்முடைய செயல்கள் அனைத்துக்கும் அவனே காரணம். அவன் ஆணையின்படியே எந்தத் துரும்பும் அசையும். நம்முடைய சுதந்திரம் எல்லாம் கடலில் செல்லும் ஒரு கப்பலில் உள்ள பிரயாணிகளுடைய சுதந்திரத்தின் அளவே. அவ்வளவு கூட இல்லை என்று சொல்லலாம். . ஆயினும் கப்பலில் செறிந்து கூடியிருக்கும் பிரயாணிகளைப் போல் நெருக்கடி உணர்ச்சி நமக்கு இல்லை.



சுதந்திரம் இருக்கிறதாகவே கருதுகிறோம். உண்மையில் ஒரு பெரிய சுதந்திரம் உண்டு — அது முயற்சி சுதந்திரம். நம்முடைய ஆன்ம வளர்ச்சிக்கு நாமே சுதந்திரத்தையும் பொறுப்பையும் வகித்திருக்கிறோம். முயற்சி நமதாயினும் பயனைத் தருவதும் தராததும் ஈசன் செயல். அதில் நமக்குச் சுதந்திரம் இல்லை. பயன் நம் கையில் இருக்கிறது என்று எண்ணினால் அகங்காரத்தில் சிக்கிக் கொள்வோம். பயனைப் பற்றிக் கவலைப்பட்டோமானால் துன்பத்தில் விழ்வோம். இதுவே கீதையின் உபதேசம். (ஹரிஜன் 23-3-40)

# அகாடமியில் கேட்ட கிரிக்கெட்!

சென்னையில் சென்ற மாதம் சங்கீதக் கச்சேரிகளிடையே கிரிக்கெட் அடிபட்டது; கிரிக்கெட் மாட்சின்போது சங்கீத விமர்சனமும் நடந்தது!


ராமபத்திரன் - பௌலர்


ஆலங்குடி - விக்கட் கீப்பர்


ராமநாதபுரம் கிருஷ்ணன்
எம். டி. ராமநாதனுக்கு பௌல் செய்கிறார்!

இந்தக் கிரிக்கெட் விளையாட்டிலே, லயம், காலப் பிரமாணம் எல்லாமே இருக்கு. ஃபாஸ்ட்பௌலிங், ஸ்லோ பௌலிங் இதைத்தான் சொல்றேன். பந்து போடறபோது லயம் தப்பினால் அது நோ பால் ஆயிடறது. பம்பர் ஆயிடறது. எனக்கு இந்த ஆட்டத்திலே சுவாரசியம் உண்டு. நானே பள்ளிக்கூட நாட்களிலே ஆடியிருக்கேன்.

— வேலூர் ராமபத்ரன்

கிரிக்கெட் விளையாட்டை ரசிக்கிற வழக்கம் உண்டான்னு என்னைப் பார்த்துக் கேட்டுவிட்டீர்களே! நல்லவேளை! உங்கள் அதிருஷ்டம்! 'கிரிக்கெட் என்றால் என்ன?' என்று உங்களைப் பார்த்து நான் கேட்கலே! அந்த மட்டிலே அது ஒரு விளையாட்டுனு நான் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறேன். அதைப் புரிஞ்சுக்க நான் முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை.

என் சுபாவத்துக்கும் இந்த விளையாட்டுக்களுக்கும் ஒரு நாளும் ஒத்து வந்ததில்லை. பள்ளிக்கூட நாட்களிலேயும் சரி; அதற்கப்புறமும் சரி, நான் பிளே கிரௌண்ட் பக்கம் எட்டிக் கூடப் பார்த்ததில்லை. அது என் எஃபெக்டோ (Effect) இல்லை என் டிஃபெக்டோ (Defect) தெரியலே! சங்கீதத் துறையிலே ஏதோ எனக்குத் தெரிந்த ஆட்டத்தை ஆடின்டிருக்கேன், அவ்வளவுதான்.

— எம். டி. ராமநாதன்

நான் ஒரு காலத்திலே ஸ்போர்ட்ஸ்மன் தான். பாட்மிண்டன் பிளேயர். ஆனால் இந்தக் கிரிக்கெட்டிலே எனக்கு லயிப்பு விழுந்ததில்லை. காரணம் அதிலே வேகம் இல்லை. என் சுபாவம் எதிலுமே கொஞ்சம் ஃபாஸ்ட் (Fast). இந்தக் கிரிக்கெட் ஆட்டத்திலே மத்திம காலம் ரொம்பக் குறைவு. பதம் பாடறதைவிட இழுவல். பார்க்கற நேரத்திலே பாதி நேரம் வியர்த்தம். ரம்மி சீட்டாட்டத்திலே அடுத்தவன் என்ன சீட்டு போடப் போறானோ என்று நடுக்கத்தோடேயே பக்கத்தில் இருப்பவன் தன் சீட்டைப் பார்த்து யோசனை பண்ற மாதிரி பாட்ஸ்மன் பௌலரை எதிர்பார்த்து நிற்க வேண்டிய நிலை. என் வீட்டுக் குழந்தைகள் இந்தக் கிரிக்கெட் விளையாட்டிலே 'ஓஹோ'

என்று ஆர்வம் காட்டறு! நான் அதைத் தடுக்கலே! அவ்வளவுதான்.

— ராமநாதபுரம் கிருஷ்ணன்

கிரிக்கெட் மாட்ச் ஒரு சங்கீதக் கச்சேரி மாதிரி. பாடறவா, கேட்கிறவா, மூடைப் (Mood) பொறுத்து அந்தக் கச்சேரியோட வெற்றி தோல்வி அமைகிறது. கச்சேரியைப் போலே இந்த ஆட்டத்துக்கும் ஆரம்பம், நடு, முடிவு என்ற பிரிவுகள் உண்டு. வாய்ப்பாட்டுக் காரர் எக்கச்சக்கமான பல்லவியை எடுத்துக் கொண்டுவிட்டால் அதை ஐந்து நிமிஷங்கள் கவனிச்ச அப்புறம்தான் பக்கவாத்தியக்காரா ளுக்குப் பிடிமானம் ஏற்படும். இப்படித்தான் பௌலிங் டைட்டாக இருந்தால் பாட் பிடிப் பவர்கள் நிதானமாகக் கவனிக்கணும். ஆண் டவன், குருநாதர் இவா அனுக்கிரகம் இருந் தால்தான் சங்கீதக் கச்சேரி சோபிக்கும். இந்தக் கிரிக்கெட் ஆட்டத்துக்கு ஆண்ட வன் அருள், குருநாதர் எல்லாம் சரியா அமையணும்! எனக்கு இந்த விளையாட்டிலே ரொம்ப ஈடுபாடு உண்டு. ஜோசியத்துக்குக் கட்டுப்படாத விளையாட்டு.

— உமையாள்புரம் சிவராமன்

ஒரு பிரவசனத்துக்குத் தகுதியாகும் அள வுக்கு இந்தக் காலத்திலே இந்தக் கிரிக்கெட் சப்ஜெக்ட் முக்கியத்துவம் பெற்றுடுத்து. ஆட்ட மைதானத்துக்கு என்னவோ க்ஷேத் திராடனம் பண்ற பக்தகோடிகள் மாதிரி கிளம்பிடறா. அதிலும் இந்தப் பெண்மணிகள் இருக்காளே, அவாளுக்கு இந்த ஆட்டம் பார்க்கறதிலே எப்படித்தான் இந்த மோகம் ஏற்பட்டதோ தெரியலே! ஆட்டம் புரிந் தாலும் புரியாத போனாலும் அவா மைதா னத்துக்குக் கிளம்பிப் போய் உட்காருவது இப்போ ஃபாஷனாயிடுத்து. எனக்கு இந்த ஆட்டத்தின் மேலே விருப்பு வெறுப்பு ஒன் றும் கிடையாது. ஆனந்தமா வீட்டிலே உட் கார்ந்தபடி ரேடியோவிலே காமெண்டரி கேட்டு அந்த ஆட்டத்தை மானஸீகமா தியா னம் பண்றுளே, அது தேவலே என்றே நான் நினைக்கிறேன்.

— எம்பார் விஜயராகவாச்சாரியார்

ஸ்வாமி!... என் ஞானத்திலே அடங்காத விளையாட்டு இது. எனக்கு இது புரிந்தபாடு இல்லே. வீட்டிலே என்னடான்னு பசங்க ளெல்லாம் இந்தக் காமெண்டரி அலறு கிற ரேடியோ முன்னுலே ஏதோ உற்சவம் பண்றுப்போலே உற்சாகமாக உட்கார்ந்து விடுகிறுர்கள். எனக்கு மட்டை பிடிச்சு ஆடறவனுக்கு ஆட்டக்காரன்னு பேரா, இல்லே, பந்தை வீசறவனுக்கு ஆட்டக் காரன்னு பேரான்னே தெரியலே! இந்தச் சங்கடமெல்லாம் நமக்கு எதற்கு என்று ஒதுங்கி விடுவேன்.

— ஆலங்குடி ராமச்சந்திரன்

பேட்டி: பட்டினத்தார்



ராமநாதன் சாவதானமாக 'சித்த இரு!' என்கிறுர்!

சிவராமன் - பௌலர்

அம்பயர் - எம்பார்!

# ராமாயணம்

## ராஜாஜி

## 43. பத்து ஆண்டுகள் கழிந்தன!

இப்போது ஆரம்பிப்பது ஆரண்ய காண்டம். சீதைக்கு ஏற்படப் போகும் விபத்துக்கு, கவி நம்மை ஆயத்தப் படுத்துகிறார். தண்டகாரண்யத்தில் சக்கரவர்த்தித் திருமகனுக்கு ஒரு புதுக் கடமை ஏற்பட்டு விட்டது; ரிஷிகளைத் துன்புறுத்தும் அரக்கர்களைக் கொல்லும் கடமை. வரப் போகும் கஷ்டத்தின் சூசனையாகச் சீதையின் மனத்தில் ஒரு பயம் தோன்றிற்று.

''வனவாசத்தில் இந்த க்ஷத்திரிய காரியத்தைத் தபசிகளான நாம் ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்? நாம் வந்தது தந்தையின் ஆணையை நிறைவேற்ற. அவர் வாக்கைச் சத்திய வாக்காகச் செய்வதற்காக வனவாசம் வந்தோம். ரிஷிகளைக் காப்பாற்றும் கடமை நாட்டையாளும் அரசனுடையது. மக்களைத் தொந்தரவுபடுத்தும் ராக்ஷசர்களைத் தண்டிப்பது பொதுவாக க்ஷத்திரிய தருமமானாலும், அது சிம்மாசனம் ஏறிய அரசனுடைய கடமை. நாமோ தவமிருக்க வந்திருக்கிறோம். அரக்கர்களைக் கொன்று ரிஷிகளைக் காப்பது நம்முடைய கடமையாகாது. நம்மை எதிர்க்க வராதவர்களைக் கொல்லுவது வனவாச விரதத்துக்கும் விரோதமாகும். இங்குள்ள ரிஷிகளுக்கு நீங்கள் வாக்குறுதி கொடுத்து விட்டீர்கள். 'ரிஷிகளைத் தொந்தரவு செய்யும் அரக்கர்களை நான் வதம் செய்வேன்' என்று பிரதிக்ஞை செய்து விட்டீர்களே? இது நம்மை எங்கே கொண்டு போய்விடுமோ, தெரியவில்லை.''

இவ்வாறு சீதை ராமனுடன் பிரியமான மொழிகளில் வாதம் செய்தாள். சுதிக்ஷண முனிவருடைய ஆசிரமத்திலிருந்து புறப்பட்டு தண்டகாரண்யத்திலுள்ள மற்ற ரிஷிகளுடைய ஆசிரமங்களுக்குப் போகும் போது இதைப் பற்றிப் பேசிக் கொண்டே சென்றார்கள்.

''என் நாதனே! எதிர்த்துப் பேசுகிறேனே என்று கோபிக்க வேண்டாம். பெண்ணாகிய எனக்குத் தோன்றுவதைச் சொல்கிறேன். எது தருமம் எது கடமை என்பது உங்களுக்குத் தெரியும். ஆலோசித்து முடிவு செய்ய வேண்டும். ஆசையினால் தூண்டப்பட்டு மக்கள் செய்யும் பெரும் பாவங்கள் மூன்று என்று பெரியோர்கள் சொல்கிறார்கள். பொய் பேசுவது, பரஸ்திரீயைத் தீண்டுவது, நம்மை எதிர்த்துத் தீங்கு செய்யாதவர்களைத் துன்புறுத்துவது. இம்மூன்றில் பொய் என்பது உங்களிடம் அண்டாது. சத்தியத்தைக் காக்க ராஜ்யாதிகாரத்தையும் போகங்களையும் விட்டு விட்டு இங்கே வனவாசம் செய்கிறீர். என் பிரியநாதனே! பரஸ்திரீயை மனத்திலகூட நினைக்கமாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியுமல்லவா? இப்போது நான் பயப்படுவது மூன்றாவது விஷயத்தைப் பற்றித்தான். அதாவது நம்மை எதிர்க்காத ஒருவனை நாம் வதம் செய்யலாமா என்பது. ராக்ஷசர்களாயினும் யாராயினும் நம்மை எதிர்க்க வராதவர்களை நாம் ஏன் கொல்ல வேண்டும்? அவசரப்பட்டு இந்த வனத்தில் வசிக்கும் முனிவர்களுக்கு வாக்குக் கொடுத்து விட்டீர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. தீயவர்களை அழிப்பது க்ஷத்திரிய தர்மமே. ஆனால் நாம் வனவாசத்தில் அந்தத் தர்மத்தை அனுசரிப்பது சரியல்ல. அரச பதவியிலிருப்பவர்களுக்கல்லவா அந்தக் கடமை சேர்ந்தது? மரவுரி உடுத்தி, தலைமயிரை ஜடையாக்கி, விரத வேஷம் பூண்ட உங்களுக்கு இந்தக் கடமை எப்படி ஏற்படும்? இது வேண்டாம் என்று எனக்குத் தோன்றுகிறது. ...ளுக்குத் தெரியாத விஷயம் ஒன்றில்லை. என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். யோசித்துச் செய்யவும்'' என்றாள் ஜானகி.

இவ்விதம் சந்தேகப்பட்டுப் பேசிய சீதையிடம் ராமனுக்குள்ள பிரியமும் மதிப்பும் முன்னைவிட அதிகரித்தது என்றே சொல்ல வேண்டும்.

''காதலி! ஜனகர் மகள் அல்லவா நீ! ஆனபடியால் இத்தகைய உயர்ந்த லட்சியம் கொண்ட பேச்சைப் பேசினாய். சீதையே, நீயே சொன்னாயல்லவா, க்ஷத்திரியர்கள் தரிக்கும் ஆயுதம் பிறரை ரட்

சிப்பதற்காகவென்று? கஷ்டப்பட்டு ஜனங்கள் அழுதால் அதைப் பார்த்துக் கொண்டு சும்மா ஒரு க்ஷத்திரியன் எப்படி இருக்கலாம்? இங்கே நாம் வந்தவுடன் என்ன கேட்டோம்? இந்த முனி சிரேஷ்டர்கள் தங்களுடைய கஷ்டங்களைச் சொல்லிக் கொண்டு, 'நாதனே, நீயும் உன் தம்பியும் எங்களைக் காப்பாற்ற வேண்டும்' என்று முறையிட்டார்கள். இந்த வனத்தில் தவம் செய்து கொண்டிருக்கிற ரிஷிகளைக் கொன்று தின்று வரும் இந்த ராக்ஷசர்களுடைய இம்சையைப் பொறுக்க முடியாமல் முறையிட்டார்கள். 'எலும்புக் குவியலைப் பார்' என்று அவர்கள் எனக்குக் காட்டினார்கள்.

**'எந்தை! மற்(று) யாருளர்**
**இடுக்கண் நீக்குவார்**
**வந்தனை யாம்செய்த**
**தவத்தின் மாட்சியால்'**
**'உருளுடை நேமியால்**
**உலகை ஓம்பிய**
**பொருளுடை மன்னவன்**
**புதல்வ! போக்கிலா**
**இருளிடை வைகினேம்**
**இரவி தோன்றினாய்**
**அருளுடை வீரநின் அபயம் யாம**

''ஆயுதம் தரிக்கும் ராஜகுமாரர்களாகிய நாம் இந்தப் புலம்புதலைக் கேட்டுச் சும்மா இருக்க முடியுமா? அரசனுடைய கடமையாயினும் க்ஷத்திரிய குலத்தின் கடமையுமாகும். என்னுடைய நன்மையை உத்தேசித்து நீ சொன்னாய். நீ சொன்னது சரியே என்று வைத்துக் கொண்டாலும் நான் வாக்குக் கொடுத்து விட்டேன். 'நீயே சரணம்!' என்றார்கள். 'நானும் உங்களைக் காப்பேன்' என்று சொல்லிவிட்டேன். இவ்வாறு பிரதிக்ஞை முடிந்து போயிற்று. இனி அதைப் பொய்யாக்க முடியுமா? நான் பொய்யனாகப்போனால் நீ பார்த்துச் சகிப்பாயா? 'என்ன கஷ்டம் வந்தாலும் நான் காப்பாற்றுகிறேன்' என்று சொல்ல வேண்டிய சொல் சொல்லியாகி விட்டது. அந்த வாக்குறுதியை நிறைவேற்றுவது என் கடமை. சக தரும சாரணியான உன்னுடைய தருமமும் ஆகும். நீ வேறு நான் வேறு அல்லவே!'' என்றான் ராமன்.

இப்படியாக அவர்கள் பேசிக் கொண்டே நடந்து சென்றார்கள்.

இவையெல்லாம் மழைக்குமுன் வரும் காற்றைப் போல் நடக்கப் போகும் அனர்த்தங்களுக்குச் சூசனையாகக் கவி அமைத்திருக்கிறார். பக்கம் நிரப்புவதற்கல்ல.

✶

தண்டகாரண்யத்தில் ரிஷிகளிடையில் பத்து வருஷங்கள் ராமலக்ஷ்மணர்களும் சீதையும் யாதொரு கஷ்டமுமில்லாமல் கழித்தார்கள்.

தண்டகாரண்யப் பெருங்காட்டில் ராமலக்ஷ்மணர்கள் இருந்த இடம் ஒரு ரிஷி மண்டலம். அநேக ரிஷிகள் அங்கே ஆசிரமங்கள் அமைத்துக் கொண்டு தவ வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார்கள். ஓர் ஆசிரமத்தில் ஒரு மாதம், இன்னோர் ஆசிரமத்தில் மூன்று மாதம் இப்படிப் பல ஆசிரமங்களில் மாதக் கணக்கிலும் வருஷக் கணக்கிலும் ராம லக்ஷ்மணர்களும் சீதையும் சந்தோஷமாகக் காலம் கழித்தார்கள். வனத்தின் அழகு சொல்ல வேண்டியதில்லை. மான் கூட்டங்கள், காட்டு எருமைகள், வராகங்கள், யானைகள், அழகிய மரங்கள், செடிகள், கொடிகள், கண்ணைக் கவரும் நீலோற்பல — தாமரைத் தடாகங்கள், நீர்ப் பறவைகள் இவற்றையெல்லாம் கவி வர்ணித்திருக்கிறார். இப்படி இயற்கை அழகுகளை அனுபவித்துவிட்டுப் பாடும் கவிகளில் வால்மீகி முதலிடம் பெற்றவர். அதில் அவருக்கு அடங்காத ருசி. பாட்டின் நாதமும் அரண்யம் போலவே கம்பீரமாக இருக்கும்.

ரிஷிகளினிடையில் வாசம் செய்ததில் உண்டான சத்ஸங்க மகிழ்ச்சியைப் பத்தாண்டு ராமன் அனுபவித்தான். கூட லக்ஷ்மணனும் தேவியும் இருந்ததனால் ராமனுடைய ஆனந்தமும் மும்மடங்காயிற்று.

பத்து ஆண்டுகளை ஓர் அத்தியாயத்தில் முடித்துவிடுகிறேனே என்று குறைப்படலாகாது. சந்தோஷமாகவும் சுகமாகவும் கழியும் காலம் இலக்கியத்தில் சுருக்கமாகத்தான் முடியும்.

இப்படிப் பத்து ஆண்டுகள் கழிந்து, வனவாச விரதத்தின் கால வரை அநேகமாகத் தீர்ந்து போனதாக எண்ணும் சமயத்தில் அகஸ்திய முனிவரைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆசை ராமனுக்கு உண்டாயிற்று.

அகஸ்தியர் விசுவாமித்திர முனிவரைப் போலவே மூவுலகிலும் புகழ் பெற்ற முனிவர். இமயமலை முதல் விந்திய மலை வரையில் உள்ள அறிவும் தவ வன்மையும் ஒரு தட்டில் வைத்து, அகஸ்திய முனிவர் ஒருவர் தென் தட்டில் அமர்ந்தால் அவருடைய பாரத்தினால் தென் தட்டு கீழே இறங்கிவிடும் என்று சொல்வார்கள். பார்வதி—மகாதேவன் விவாகத்தைப் பற்றிச் சொல்லப்படும் கதை அனைவருக்கும் தெரியும். எல்லா முனி சிரேஷ்டர்களும் கைலாசம் சென்று பூபாரம் அங்கே அதிகமாகப் போனபடியால் அகஸ்தியர் தெற்கே இருந்து கொண்டு பூமியின் சமநிலையைக் காத்தார் என்பது அகஸ்தியருடைய மகிமையைக் காட்டும். **(தொடரும்)**

# குரல் பயிற்சி

★ சென்ற மாதம் தமிழ் இசைச் சங்க விழாவில் சங்கீத கலாநிதி செம்மங்குடி ஸ்ரீநிவாஸ அய்யர் தமது தலைமை உரையில் குரலை அபிவிருத்தி செய்துகொள்வதன் அவசியத்தை வலியுறுத்திப் பேசியுள்ளார். இதே கருத்தை மகாகவி பாரதியாரும் ரவீந்திரநாத் தாகூரும் வலியுறுத்தி யிருக்கிறார்கள். அவற்றிலிருந்து சில பகுதிகள் :

## மகாகவி பாரதியார்:

சுமார் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு நான் இரண்டு மூன்று வருஷங்கள் ஸ்ரீ காசியில் வாசம் செய்தேன். அங்கே, பாட்டுக் கச்சேரி செய்ய வரும் ஆண்களுக்கெல்லாம் நேர்த்தியான வெண்கலக் குரல் இருந்தது. பெண்களுக்கெல்லாம் தங்கக் குரல். அங்கிருந்து தென்னாட்டுக்கு வந்தேன். இங்கே, ஓரிரண்டு பேரைத் தவிர மற்றப்படி பொதுவாக வித்வான்களுக்கெல்லாம் தொண்டை சீர்கெட்டிருப்பதைப் பார்க்கும்போது எனக்கு மிகவும் வியப்புண்டாயிற்று !

நம்மவர் தொண்டையை நேரே பழக்குவதில்லை. காட்டுவெளிகளிலே போய்க் கர்ஜனை செய்ய வேண்டும். நதி தீரங்கள், ஏரிக்கரை, கடற்கரைகளிலே போய்த் தொண்டையைப் பழக்க வேண்டும்.

பாட்டு சகலருக்கும் நல்லது. தொண்டையும் எல்லோருக்கும் நல்ல தொண்டைதான் என்பது என் மதம். கூச்சத்தாலும், பழக்கக் குறைவாலும் பலர் தமக்கு நல்ல குரல் கிடையாதென்று வீணே நினைத்துக் கொள்கிறார்கள்.

பாட்டு கற்க விரும்புவோர் காலையில் சூரியனுக்குமுன்பே எழுந்து பச்சைத் தண்ணீரிலே குளித்துவிட்டுக் கூடிய வரை சுருதியும் லயமும் தவறாதபடி ஸரளி வரிசை முதலியன பழக வேண்டும். உச்ச ஸ்தாயிதான் எப்போதும் நல்லது. உடம்பை நிமிர்த்தி முகத்தை நேரே நிறுத்தி முகத்திலும் வாயிலும் கோணல் திருகல் இல்லாதபடி வாயை ஆவென்று சிங்கம்போல் திறந்து பாட வேண்டும். தொண்டையிலே கரகரப்பிருந்தால் வெறும் மிளகைத் தின்ன வேண்டும். கற்கண்டு சேர்ப்பது நல்லதல்ல.

ஆணாயினும், பெண்ணாயினும் கள்ளத் தொண்டை வைத்துப் பாடலாகாது. தொண்டை திறந்து பாடினால்தான் சுகமுண்டாகும். இயற்கையிலேயே ஆணுக்குக் கனமான குரலும் பெண்ணுக்குச் சன்னமான குரலும் ஏற்பட்டிருக்கின்றன. பெண்களிலே சிலர் இயற்கைச் சன்னத்தை அதிகச் சன்னப்படுத்த வேண்டும் என்று கருதிக் கள்ளத் தொண்டையில் பாடுகிறார்கள். வேறு சிலர் லஜ்ஜையினாலே கள்ளத் தொண்டைக்கு வந்து சேருகிறார்கள். இதுவும் தவறேயாம். தொண்டையைத் திறந்து தெளிவாகப் பாடுவதிலே லஜ்ஜைப்பட யாதொரு நியாயமுமில்லை.

## ரவீந்திரநாத் தாகூர்:

குரலைப் பழக்குவதில் நமது தேசத்துப் பாட்டுக்காரர்களைக் காட்டிலும், மேற்கு நாட்டுப் பாடகர்கள் மிகவும் சிறப்புடையோர். அவர்களுக்குத் தொண்டை வசப்பட்டிருப்பது போல, இங்கு இல்லை. நம்மவர்களிலே உயர்ந்த பாட்டுக்காரர்கள் பாடும் போதுகூட 'இவர்கள் சிரமப்பட்டுப் பாடுகிறார்கள்' என்ற விஷயம் வெளியே தெரிந்து விடுகிறது. யாதொரு சிரமமும் காட்டாதபடி மழை பெய்வதுபோல் இயற்கையாகப் பாடும்படி நம்மவர் சாரீரத்தைப் பழக்கவில்லை. சில சமயங்களில் மேல் ஸ்தாயியிலும், தமக்கு எட்டாத ஸ்வரங்களைத் தொட முயற்சி செய்கிறார்கள். ஐரோப்பாவில் பாட முன்வருவோரின் தொண்டை, வல்லவன் வாசிக்கும் வாத்தியம் போல், ஒரு குற்றம், ஓர் அபசப்தம், ஒரு கரகரப்பு, ஒரு பிழை இல்லாமல் இருக்க வேண்டும். இவ்வாறு தொண்டைப் பயிற்சி செய்யாதோர் அங்கே பாடுவதாக வெளிப்பட மாட்டார்கள்.

இனியாயினும் நமது தேசத்து வித்வான்கள் கண்டப் பயிற்சி, சபா நாகரிகம் என்ற அம்சங்களில் ஐரோப்பியர்களுக்குச் சமானமாகும்படி முயற்சி செய்தால் நல்லது. ஜனங்களுக்கு இன்பம் அதிகப்படும். பாடுவோர்க்கும் பணம் அதிகப்படும் !

— தி. முத்துகிருஷ்ணன்



# சிலையைத் தேடி.. 17


அந்நிய நாட்டில் துறைமுகத்தில் பொறுப்பான பதவியிலி ருந்ததால் கோபால் இளம் குழந்தைகளை நாகரீகத் தந் நிலைக்கு ஏற்றபடி வளர்த்திருந்தார். அவர்களுக்கு நீந்தத் தெரியும். நீலாவிடம் நீச்சல் உடையுமிருந்தது.
நல்லவேளையாக 'சுங்கிங்' இந்தத் திடீர்ப் பயணத்துக்காக எங்களுக்கு ஏற்ற உடை கள் வாங்கித் தந்தி ருந்தார்.. அவர்கள் தாமதமாக வர வேண்டுமே..
கதை வாண்டுமாமா
சித்திரம் ரமணி..


நங்கூரச் சங்கிலியைப் பற்றித் தொற்றி விசைப் படகின் மேல் ஏறினாள் நீலா. ஜலம் புகாத விசேஷ டார்ச் விளக்கை யும் கையோடு கொண்டு வந்திருந்தாள்.


அந்த டைரியை எங்கே வைத்திருப்பார்கள்? அதோ மேஜை.. அதன் டிராயரில்....


நீலாவின் ஊகம் வீண் போகவில்லை. டிராயரை இழுத்ததும் மேலேயே குறிப்பிட்ட டைரி இருந்தது....
DIARY


விசித்திரமான வர்ணனை.. விளங் காத வார்த்தைகள்.


அதே சமயம்... ஓட்டலில்..
வா, ஷோபா.. நாம் படகுக்குத் திரும்புவோம்.
அட, ஆண்டவா! அவர்கள் கிளம் புகிறார்களே... நீலா சிக்கிக் கொண்டாளே!



# குடை ராட்டினம்

அத்தியாயம் 2

எஸ். ரங்கநாயகி

ஆனந்த் ஒரு பாட்டைச் சீட்டியடித்துக்கொண்டே உள்ளே நுழைந்தான்.

கட்டிலில் படுத்திருந்த தந்தை சீதாபதியைக் கண்டதும், "அப்பா இன்றைக்கு ஓர் ஆச்சரியம்!" என்றான்.

"என்னடா?"

"ஒரு பிச்சைக்காரி மாடல் வரைந்திருந்தேனல்லவா? அதை ஐம்பது ரூபாய்க்கு விற்று விட்டேன்."

"சபாஷ்!"

"யார் வாங்கினார், தெரியுமா? ஒரு கோடீசுவரர். அந்தப் படத்தைப் போலவே உயிருள்ள ஒரு பிச்சைக்காரி அருகில் இருந்தாள். அவளுக்கு நல்ல பசி. அந்தப் பசிக்கு ஐந்து பைசா போட மறுத்தவர், அவளைப் போல் இருந்த சித்திரத்துக்கு ஐம்பது ரூபாய் கொடுத்தார், அப்பா!" என்று கூறிவிட்டுப் பெரிதாகச் சிரித்தான் ஆனந்த்.

"அதுதான் உலகம்டா!" அப்பாவும் சிரித்தார்:

"அந்தப் பசித்த உண்மை உருவத்துக்கு நான் ஒரு ரூபாய் கொடுத்தேன். பொய் உருவம் உண்மை உருவத்துக்குச் சோறு போடும் விந்தையைக் கவனித்தீர்களா?" ஆனந்த் மீண்டும் சிரித்தான்.

"அது சரி, கண்ணனின் உருவம் ஒன்றை வடித்தெடுத்தாயே! அதற்கு நூறு ரூபாயாவது கிடைத்திருக்குமா?"

"நூறு? நன்றாகக் கேட்டீர்கள்! அதற்குப் போட்டிக்கு மேல் போட்டி, அப்பா! நான் எண்ணக்கூட இல்லை. நிறைய நோட்டுக்களாகத் திணித்து அதை ஒருவர் எடுத்துக் கொண்டார்."

"அவ்வளவு மதிப்புப் பெறும் என்பதை நான் அறிவேனடா."

தான் பேசியது பொய் என்பதை ஆனந்த் அப்பாவிடம் கூறவில்லை. அதை விற்க எவ்வளவு பாடுபட வேண்டியிருந்தது? அதை அவனல்லவோ அறிவான்? அன்று கையில் காலணா இல்லாத நிலை. தந்தைக்கு மருந்து வாங்க வேண்டிய அவசியம் வேறு. அதனால் ஒருவரிடம் கெஞ்சிக் கூத்தாடி அதைச் சொற்ப விலைக்கு வாங்கிக் கொள்ளச் செய்திருந்தான்.

இரண்டாவதாகக் கூறிய அநுபவங்கள்தான் அவனுக்கு அதிகம். பாங்கிப் பணத்தையெல்லாம் அவன் பெயருக்கே மாற்றி விட்டிருந்தார் தந்தை. அதனால் அவன் தன் தொழிலைப் பற்றிப் பெரிதாகக் கூறிச் சமாளிக்க முடிந்தது.

"ஆனந்த், ஃபிக்ஸட் டிபாஸிட்டில் இன்று வட்டி வந்திருக்குமே, அதை நினைவாக வாங்கி ரசீதைப் புதுப்பித்தாயா?" — சீதாபதி கேட்டார்.

"ஓ! பணமாச்சே, மறப்பேனா? அதோடு இன்னும் கொஞ்சம் பணம் சேர்த்துப்போட்டிருக்கிறேன்" என்றான்.

'சேர்த்துப் போட்டிருக்கிறேன்' என்றால் அவன் அகராதியில் குறைந்துவிட்

மனைவி மறைந்தபோது ஏற்பட்ட துயரத்தைக் காட்டிலும் தாம் படுக்கையோடு கிடந்த துயரம்தான் அவருக்கு அதிகமாயிருந்தது. சொல்லப் போனால் தாயற்ற மகனுக்காக அவர் துயரடையவில்லை. கட்டிலோடு கிடக்கும் தமக்கு மகன் ஊழியம் செய்யும் நிலை ஏற்பட்டது தான் அவரைப் பெரும் சோகத்துக்கு ஆளாக்கியது. அதோடு அவரை உத்தேசித்து அவன் வேலைக்குப் போகவே சம்மதிக்கவில்லை. அது அவருக்குப் பெருங் குறை.

''ஆனந்த்! இந்த ஓவியக் கலை ஓர் உம்மணும் மூஞ்சிக் கலை. இது சோறு போடுமாப்பா?'' என்பார் தந்தை.

''சோறு போடுவதா? பசித்தால் தானேப்பா சோற்றுக்கு அவசியம்? இதைப் பார்த்துக் கொண்டே இருந்தால் பசி வருகிறதா வென்று பாருங்களேன்!'' என்பான் ஆனந்த்.



''ஆனந்த்!''

அறையின் வாசற்படியிலிருந்தபடியே வாசு கூப்பிட்டான்.

சீதாபதியும் ஆனந்தின் பாட்டில் மெய்ம் மறந்திருந்தார். வாசு வந்ததை அவரும் கவனிக்கவில்லை.

''ஆனந்த்!''

வாசு அழுத்திக் கூப்பிடவே, சீதாபதி திரும்பினார்.

''வாப்பா!'' சைகையினால் சீதாபதி அவனை அழைத்துத் தம்மருகில் அமர்த்திக் கொண்டார்.

ஆனந்த் பாட்டுடன் இயங்கிய மிருதங்க ஒலியென வாசுவின் குரலைக் கேட்டான். கைகள் பியானோவில் இருக்க, உடலை மட்டும் மெதுவாகத் திருப்பிப் பார்த்தான்.

''ஆனந்த்! நீ பாக்கியவானடா!'' வாசு கூறினான்.

''அப்பாவுக்கு இப்படிச் சேவை செய்யும் பாக்கியம் பிள்ளைக்குக் கிடைத்திருக்கிறதே, அதைச் சொல்கிறாயா, வாசு?'' என்று கேட்டார் சீதாபதி.

தாம் படுத்திருக்க, தமக்காக மகன் இப்படிப் பாடுபடுகிறானே என்று சீதாபதியின் நெஞ்சு முழுவதும் வருத்தம் என்பதை வாசு அறிவான். வாசுவிடம் தம் மனக் கிலேசத்தை ஏதோ ஒரு முறையில் வெளிப்படுத்திக் கொண்டே தான் இருப்பார் சீதாபதியும்.

''மாமா, உங்கள் மகனை இப்படி எத்தனை நாட்கள் தான் விட்டு வைத்திருப்பீர்கள்? உங்கள் வீட்டுக்கு ஒரு மருமகள் வரவேண்டும் என்ற ஆசையே இல்லையா உங்களுக்கு?'' சீதாபதியை நோக்கிக் கேட்டான் வாசு.

''ஏ வாசு! என் அப்பா மேலே என்னப்பா வன்மம் உனக்கு? போட்டிக்கு ஆள் தேடறே?''

''என்னப்பா சொல்றே நீ?''

''அப்பனே! என்னால் ஒருவருக்குத் தான் சேவை செய்ய முடியும்! இன்னொருவரை இங்கே இழுத்துவிட முயலாதே. அடுப்பு ஊதவோ, வெந்நீர் காய்ச்சவோ என்னால் ஆகாதுடா!''

''பார்த்தீங்களா மாமா, இவன் பேச்சை!''

''ஆமாம், உன் கல்யாணம் எப்போ, வாசு? அதை நீ சொல்லவே இல்லையே!'' சீதாபதி வாசுவைப் பிடித்துக் கொண்டார்.

✶

''கேட்டியாப்பா, விஷயத்தை! சும்மாத் தலையாட்டிட்டு எழுந்து போற

''தேங்க்ஸ் அப்பா! நீங்கள் இது போல் கூறியதற்கு உங்களுக்கு ரொம்ப நன்றி!'' — ரமா உள்ளே நுழைந்தபடி கூறினாள். அவள் பின்னே காந்தியும் வந்தாள்.

வெளியே சென்றிருந்த ரமாவும் காந்தியும் திரும்புவதற்குள் சொல்லிவிட வேண்டு மென்றிருந்த பொன்னம்மாவின் விருப்பம் ஈடேறவில்லை. அதனால் பொன்னம்மாவின் மனத்தில் கோபமும் ஆத்திரமும் மாறி மாறிப் பொங்கி வந்தன.

''இந்தாப்பா கோசல், நீயாச்சு, உன் மகளாச்சு. நான் எதுக்கு இடையே புகுந்து கெட்ட பெயர் வாங்கணும்?... நல்லதை நான் சொல்ல வந்தால் அது உங்களுக்குக் கெடுதலாகத்தானே தோணுது!'' இரு கைகளையும் விரித்த படி கூறினாள் பொன்னம்மா.

''அப்படியில்லே, பொன்னம்மா! நான் உண்மையாகத்தான் சொன்னேன். வாசுவைக் காதலித்து விவாகம் செய்து கொள்பவள் அவள். வாசு தனக்கு ஏற்ற மணாளன்தானா, அவனோடு தன் வாழ்வு நன்றாக இருக்குமா என்பதைப் பற்றியெல்லாம் யோசனை செய்யவேண்டியவளும் அவளே. அதுக்கு நான் பொறுப்பில்லே.''

''நீ சொல்வது எனக்குப் புரியாமல் இல்லே. இருந்தாலும் இவர்கள் சின்னப் பெண்கள். உலக அநுபவம் போதாது. இப்போது தலை கால் தெரியாமல் குதிக்கும். நாளைக்கு வாழ முடியலேன்னு துன்பப்படும். அப்போ அந்தப் புருஷனை உதறித் தள்ளிவிட முடியுமா? பெரியவங்கதான் இதையெல்லாம் யோசனை செய்து பார்க்கணும். குழந்தைகளுக்கு நல்ல புத்தி சொல்லணும். தெரியாமலா 'விவாகம் ஆயிரம் காலத்துப் பயிர், பெரியவங்க பார்த்து நிச்சயம் செய்யணும்'னு சொல்லி யிருக்காங்க?''

''வாழ முடியாமல் கண்ணைக் கசக்கி நின்னுட்டா நான் இருக்கேனே! வீட்டோடு வைத்துக் கொள்ள வேண்டியது தான். விட்டுவிடுவேனா?'' என்றார் கோசல்ராம்.

''கேட்காமல் கொள்ளாமல் இது போல் ஓர் இடத்தை நீ நிச்சயம் பண்ணணும்னு தலைவிதி இருந்தால் அதுக்கு நான் குறுக்கே நிற்க முடியுமா? உனக்கும் எனக்கும் உறவு முறை, கிட்டி இருக்கு. உனக்கு நல்லது செய்யணும்னு என்னோட விருப்பம். இதைத் தான் அன்னிக்கே ரூபகுமார்கிட்டே கூடச் சொன்னேன்.''

''ரூபகுமாரா? அது யார் ரூபகுமார்?'' கோசல்ராம் கேட்டார்.



இந்த படங்களிலும் உள்ளவர் ஒரே ஆசாமி தான். முப்பது ஆண்டுகளாக 'மாஜே ஆக்டிங்'கில் ஈடுபட்டு வருகிற திரு சந்திரசேகர்தான் அவர். இங்குள்ள படத்தில் மாஸ்கோவில் ருஷ்ய மாணவி ஒருத்திக்குக் கையெழுத்துப் போட்டுத் தருகிறார்.

— ஏ. சுவாமிநாதன்

''சரியாப் போச்சு! அவன் யார் என்றுகூட உனக்குத் தெரியாதா? இவங்க இரண்டு பேருக்கும் தெரியுமாமே! வாசுவைப் பற்றிச் சொன்னவங்க அவனைப் பற்றிச் சொல்லலையா?'' பொன்னம்மா இடித்துக் காட்டுவது போல் கூறினாள்.

''சும்மா இருங்கள், அத்தை. வாசுவைப் பற்றிச் சம்பந்தம் இருப்பதால் அப்பாவிடம் கூறும்படி நேரிட்டது. ரூபகுமாரைப் பற்றி அப்படியொன்றும் சம்பந்தம் இருப்பதாகத் தெரியலே.''

''கேட்டியாப்பா, உன் மகள் சொல்றதை! அத்தை மகன் முறையாகணும் ரூபகுமார். அவன் சம்பந்தம் தேவையில்லையாம். ஆனால் எவனோ நேற்று வந்தவன் வாசு, அவன் சம்பந்தம் தேவையாம்! புரிந்ததா?''

ரமாவுக்கு எரிச்சலாக வந்தது. எவனைப் பற்றி அவள் அதிகம் பேச விரும்பவில்லையோ, அவனைப் பற்றியே மீண்டும் மீண்டும் கூறுகிறாளே இந்த அத்தை! வாசுவின் மீது தந்தைக்கு வெறுப்பு உண்டாகும்படி செய்கிறாளே! உறவு முறை கொண்டாடிக் கொண்டு இவனை இங்கு யார் வரச் சொன்னது? அத்தைக்குக் கூடச் சுட எப்படிப் 'பதில் கொடுப்பது என்பது புரியாமல் ரமா திணறினாள்.

''அத்தை! ஒரு வீட்டுக்கு மாப்பிள்ளையாக வரப் போகிறவன் முதலிலேயே சம்பந்தத்தோடு இருக்க வேண்டுமென்பது கட்டாயமில்லே. மாப்பிள்ளையாக வந்த பிறகுதான் உறவு முறை கூடும். மாப்பிள்ளையாக வரப் போகிறவரை அப்பா தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். அதற்காக அப்பாவைச்

சேர்ந்த உறவுக்காரர்கள் எல்லோரையும் பற்றி அவர் தெரிந்து வைத்திருக்க வேண்டுமென்பது அவசியமில்லையே!''

இப்படிக் கூறினவள் காந்தி.

அத்தைக்குக் காந்தி சுடச் சுடப் பதில் கொடுத்ததில் ரமாவுக்கு ஒரு திருப்தி. அத்தைக்கோ ஆத்திரம்.

இந்த நேரம் பார்த்து ரமாவையும் காந்தியையும் ஒரு கல்யாணத்துக்கு அழைத்துப் போக வசந்தி வந்து சேர்ந்தாள்.

ரமாவும் காந்தியும் வேறு உடை மாற்றிக்கொண்டு தந்தையிடம் அனுமதி பெற வந்தனர். ''அப்பா, வசந்தியோடு ஒரு விவாகத்துக்குப் போய் வருகிறோம்!'' என்றாள் ரமா. கோசல்ராம் தலையாட்டினார்.

''ஜாக்கிரதையாகப் போய்விட்டுச் சீக்கிரமாக வந்து சேருங்கள்!'' என்றாள் அத்தை. அவளுக்குக் கோசல்ராமிடம் தனித்துப் பேச வாய்ப்புக் கிடைத்து விட்டதில் மகிழ்ச்சி. இருவரும் சென்ற பிறகு தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ''கோசல்! நீ என் பேச்சை மதிக்கலேன்னு தெரிந்திருந்தும் என் மனசு கேக்கல்லே. வாசுன்னு ஏதோ சொன்னியே, அவனைப் பத்தி நல்லா விசாரிக்கணும். உன் கௌரவத்துக்குப் பங்கம் வரக் கூடாது!'' என்றாள்.

இதே நேரம் வாசலில் கார் சப்தம் கேட்டது. பொன்னம்மாள் திடுக்கிட்டாள். ஒருவேளை இப் பெண்கள்தாம் போகாமலே திரும்பி விட்டார்களோ? கோசல்ராமைப் பார்க்க வேறு யாராவது வந்து விட்டார்களோ? இதென்ன, அவள் பேச்செடுக்கும் போதெல்லாம் அபசகுனம் போல் யாராவது வந்து கொண்டு...

பொன்னம்மாளின் சிந்தனை முடியவில்லை. ''பெரியம்மா!'' என்று கூப்பிட்டுக் கொண்டே ரூபகுமார் உள்ளே வந்தான்.

உடலில் ஊதா சூட். ஸெண்டின் மணம் முன்னோடியாக நின்றது. படிய வாரிவிட்ட கிராப். அவனே வெளுத்த நிறம்தான். அதற்கு மேல் உயர்ரகப் பவுடரின் மேல் பூச்சு. உள்ளே குதூகலத்துடன் நுழைந்தவன் பொன்னம்மாளின் அருகில் வேறொருவர் அமர்ந்திருப்பதைக் கண்டு தயங்கி நின்றான்.

''நீதானா? கார் சப்தம் கேட்டதும் யாரோன்னு பயந்துட்டேன். நல்ல சமயத்துக்குத்தான் வந்திருக்கே. உள்ளே வந்து இப்படி உட்கார்!'' என்று மகிழ்ச்சியுடன் வரவேற்றாள் பொன்னம்மாள்.

ரூபகுமார் மெள்ள வந்து பொன்னம்மாளின் அருகில் பவ்யமாக அமர்ந்தான்.

''என்னடா இப்படி நடுங்கறே? இது யாருன்னு தெரியலையா? இதுதான் கோசல்ராம். ரமா, காந்தியோட அப்பா...''

ரூபகுமார் கோசல்ராமை நோக்கிக் கரம் குவித்தான். ''ஓ! ரமாவின் தந்தையா? உங்களைச் சந்தித்ததில் ரொம்ப சந்தோஷம்.''

''கோசல், இவன்தான் ரூபகுமார். இப்ப சிறிது நேரத்துக்கு முன்னாடிப் பேசிக்கிட்டிருந்தோமே, அந்தப் பையன்தான் இவன். இந்த ஊரில்தான் இருக்கிறான்.''

கோசல்ராம் அவனை நோக்கினார். பிறகு, ''இந்த ஊரில்தான் படித்துக் கொண்டிருக்கிறாயா?'' என்று கேட்டார்.

''நன்னாத்தான் கேட்டே, போ. இவன் படிப்பெல்லாம் முடிந்து வியாபாரத்தில் இருக்கிறான். நீ என்னடான்னா இப்பத்தான் மெள்ளப் படிக்கிறானான்னு கேட்கிறே! இவனுக்குப் படிக்கணும்னுகூட அவசியம் இல்லை. அப்பா ஆரம்பிச்சு வச்ச வியாபாரம் இருக்கு. அதையே நல்லாப் பெரிசாக்கிட்டான். கை நிறையப் பணம் இருக்கு. அப்படி இருந்தும் படிப்பு மேலே ஆசையிலே படிச்சு முடிச்சுட்டான்.... இவன் யாருன்னு தெரியலையா உனக்கு? என்னோட தங்கை மரகதம்னு ஒருத்தி இருந்தாளே, நினைவு இருக்கா?...''

கோசல்ராம் தலையாட்டினார். மரகதம் காதலித்து விவாகம் செய்துகொண்டது நினைவுக்கு வந்தது.

''அந்த மரகதத்தின் ஒரே பிள்ளைதான் இந்த ரூபகுமார். இப்போ அப்பாவும் இறந்துட்டார். அப்பா வியாபாரத்தை இவன் கவனிக்கிறான்.''

''என்ன வியாபாரம்?''

'''கேசவ் ஸ்டீல்· புரொடக்ஷன்' பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே, அதில் முக்கால் பங்குக்கு மேல் அப்பாவினுடையது. இன்னும் சில கம்பெனிகளிலும் டைரக்டராக இருந்தார். அப்பா பதவிகளிலெல்லாம் இப்போது நான் இருக்கிறேன். வேறு சில இடங்களிலும் டைரக்டராக இருக்கிறேன்.''

''நீ ஆர். கேசவ்வின் புதல்வனா?''

''ஆமாம். உங்களுக்கு அப்பாவை முன்பே தெரியுமா?''

''கேள்விப்பட்டிருக்கிறேன். நேரிடப் பழக்கம் இல்லை.''

இவர்களின் பேச்சைக் கவனித்த பொன்னம்மாளின் இதயம் ஆனந்தத்தில் நிரம்பியது. அவள் பயந்தது போல் அபசகுனம் இல்லை. எல்லாம் சுப சகுனமாகத்தான் தோன்றியது.

(தொடரும்)

# கண்ணில் பட்டதும் காதில் விழுந்ததும்

**பு**கைப்படம் பிடிப்பது மிகவும் சுலபம். ஆனால் அந்தப் புகைப்படத்தையே ஒரு கலைப் படமாகப் பிடிப்பது கடினம். காமிராவில் விழும் காட்சியில் கலை அம்சம் இருக்கிறதா, எடுக்கப்படவிருக்கும் அந்தக் காட்சி, படமாக மாறும்போது அதில் ஒரு 'தனித்துவம்' இருக்குமா என்பதை யெல்லாம் முன் கூட்டியே நிர்ணயித்து காமிராவின் பொத்தானை அழுத்தும் புகைப்படக்காரர் சிறந்த கற்பனை வளம் உள்ளவராக இருக்க வேண்டும்.

ஜெர்மானிய தூதரகத்தைச் சேர்ந்த கண்டர் காப்ஃப் (Gunter Kopf) இந்த ரகத்தில் சேர்ந்தவர். கடந்த சில ஆண்டுகளில் அவர் பாரதத்தின் பல பகுதிகளுக்கும் போய் வந்து ஆங்காங்கு தாம் ரசித்த சில காட்சிகளைப் புகைப்படங்களாக மாற்றி அந்தப் புகைப்படங்களைத் தொகுத்துச் சமீபத்தில் சென்னை மாக்ஸ்முல்லர் பவனில் கண்காட்சியாக வைத்திருந்தார். கன்யாகுமரியிலிருந்து காஷ்மீர் வரை, மக்கள், மரங்கள், எல்லாமே அவர் காமிராவில் சிக்கியிருக்கின்றன.

மயிலாப்பூர் கபாலீசுவரர் கோயில் குளக்கரையின் மேற்குப் பக்கப் படிகளிலிருந்து நாம் எத்தனையோ தடவைகள், அக்கரையில் உள்ள குளப் படிகளையும் கோபுரங்களையும் பார்த்திருக்கிறோம். அதே காட்சியை கண்டர் காப்ஃப் ஒரு நல்ல கோணத்திலிருந்து படம் பிடித்திருக்கிறார். இந்தப் பக்கத்தில் உள்ள தென்னை மரக் கீற்றுகளூடே காமிராவின் பார்வையை ஓட்டியிருக்கிறார். முன்னணியில் நிற்கும் அந்தத் தென்னங் கீற்றுக்கள் கோபுரப் பின்னணிக்கு ஒரு தனி அழகைக் கொடுக்கிறது.

'தொழிலில் மந்த நேரம்' என்ற தலைப்பில் ஓர் எவர்சில்வர் பாத்திர வியாபாரி தம் கடையில் பாத்திரங்கள் நடுவே உட்கார்ந்து நிம்மதியாகப் பத்திரிகை படித்துக் கொண்டிருக்கிறாற்போல் ஒரு புகைப்படம். பளபளக்கும் பாத்திரங்களினிடையே படபடப்பு இல்லாத வியாபாரியின் முகம், மிகவும் ரசிக்கத்தக்க மாறுதல்.

'தேநீர் வேளை' என்ற தலைப்பில் காலம் சென்ற பண்டித ஜவாஹர்லால் நேரு உணவருந்தும் நேரத்தில் ஒரு படம் இருந்தது. உற்சாகம் நிறைந்த அந்த முகத்தைச் சாதாரணமாக வேறு படங்களில் பார்த்திருக்க முடியாது. மகாபலிபுரக் காட்சிகள் (படம்), நாகர்கோவிலுள்ள தென்னை மரங்கள், தில்லிக் கல்யாணம், கல்கத்தா டிராம் வண்டி எல்லாமே இந்தப் புகைப்படக் காட்சியில் இடம் பெற்றிருந்தன. சுமார் நூறு படங்கள். எல்லாவற்றிலும் ஒருவித துடிதுடிப்பை உணர முடிந்தது.

'ஒரு ஜெர்மானியரின் பார்வையில் பாரதம்' என்ற தலைப்பு இந்தக் காட்சி அமைப்புக்குக் கொடுக்கப்பட்டிருந்தது.

அந்த ஜெர்மானியரின் பார்வையில் கலை நயமும் கற்பனையும் நிறைய இருக்கின்றன என்று பாராட்டலாம்.

* * *

**இ**ங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த திரு ஆங்கஸ் வில்ஸன் என்ற நாவலாசிரியர் சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்தார். எழுத்தாளர்களுக்காகவும், ரசிகர்களுக்காகவும், அவர் பிரிட்டிஷ் கௌன்ஸில் வாசகசாலையில் ஒரு முக்கால்மணி நேரச் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

சம்பிரதாயமாக உடை அணியும் பாணியை இன்றும் விடாதவர்கள் பிரிட்டிஷ்காரர்கள். ஆனால் ஆங்கஸ் வில்ஸனோ, அநாயாசமாகத் தற்கால அமெரிக்கப் பாணியில் வெள்ளைப் பூக்கள் போட்ட கறுப்பு அரைக் கைச் சட்டையைப் போட்டுக் கொண்டு வந்து சிரிக்கச் சிரிக்கப் பேசி முடித்தார். முப்பத்தி ஆறு வயதில்தான் அவர் எழுத ஆரம்பித்தாராம். இப்போது அவர் அறுபது வயதை எட்டிக் கொண்டிருக்கலாம்.

'என் தாயாருக்கு வம்பு பேசுவது என்றால் ரொம்பப் பிடிக்கும். என் தகப்பனாரோ பணத் தட்டுப்பாடு ஏற்படும்போது, பணம் புரட்டச் சுவையான சரடுகள் விடுவார். வீட்டில் அடிக்கடி குடும்பச் சண்டை நடக்கும். நான் சிறுவனாக இருந்த போது இந்தச் சண்டைகளைக் கவனிப்பேன். இவையெல்லாம் சேர்ந்துதான் என்னை ஒரு நாவலாசிரியனாக மாற்றின என்று நம்புகிறேன்' என்று சொல்லிக் கலகலப்பை ஏற்படுத்தினார்.

''இவர் புதிதாக என்னத்தைச் சொல்லி விட்டார்?'' என்று அங்கலாய்த்தார் ஓர் உள்ளூர் எழுத்தாள நண்பர்.

''புதிதாக ஏதாவது இருந்தால், உம்மிடம் ஏன் ஐயா சொல்லுகிறார்? அவருடைய அடுத்த நாவலுக்கு அதைப் பத்திரப்படுத்திக் கொள்ள மாட்டாரா?'' என்றார் பக்கத்திலிருந்த ஒரு வாசக ரசிகர்.

– மேனு



# உங்களுக்கு சுவையுள்ள, கெட்டியான, ஸ்ட்ராங்கான மற்றும் உடனே தயாராகும் காபி வேண்டுமா...

இதோ
**ப்ரூ**
இருக்கிறது




ப்ருக் பாண்ட்
**ப்ரூ**
இன்ஸ்டண்ட்

காபி சிக்கரி ப்ளெண்ட்

கெட்டியான, ஸ்ட்ராங்கான
காபி-சிக்கரி கலவைதான் ப்ரு.
உடனடியாக தயாராகிவிடுகிறது!
புத்துணர்ச்சியளிக்கும்
மிகச் சிறந்த பானம்.

## அத்தியாயம் 20

# சதித் திட்டம்!




"ஹல்லோ சாரங்கன்! வெல்கம்! உள்ளே வாருங்கள்" என்ற டாக்டர் வேணுகோபால், வரவேற்பு அறையில் இப்போது சோபாவாக விளங்கிய சோபா—கம் பெட்டை நோக்கிக் கை காட்டினான். "உட்காருங்கள். நீங்கள் ஒன்றும் தவறாக நினைத்துக் கொள்ள மாட்டீர்கள் என்று நம்பிச் சொல்கிறேன்! உங்கள் 'வெய்ஸ்ட் லைன்'னில் நீங்கள் கவனம் செலுத்த வேண்டும். இலேசாகத் தொந்தி போட ஆரம்பித்திருக்கிறது. இப்போதே அதைக் கட்டுப்படுத்தாமல் வளரவிட்டால் அப்புறம் அதை அடக்கி ஆளவே முடியாமல் போய்விடும். நிறைய எக்ஸர்ஸைஸ் செய்யுங்கள். இந்த உலகத்திலுள்ள தொண்ணூற்று ஐந்து சதவிகிதம் வியாதிகளுக்கு அடிப்படைக் காரணம் 'ஓவர்வெய்ட்'தான் என்று நிருபிக்கப்பட்டிருக்கிறது."

சாரங்கன் சிரித்தான். "வேணு! நான்...."

"எனக்குத் தெரியும். நீங்கள் என்னை டாக்டர் என்ற முறையில் பார்க்க வரவில்லை. நானும் டாக்டர் என்ற முறையில் இதைச் சொல்லவில்லை. இது என் 'கன்ஸல்டிங் ரூ'முமில்லை. ஒரு 'ஃபிரெண்ட்லி அட்வைஸ்', அவ்வளவுதான்."

"நான் சொல்ல வந்தது வேறு. தினம் அரை மணி நேரத்துக்குக் குறையாமல் தேகப் பயிற்சி செய்கிறேன். அது போதவில்லை என்று புரிகிறது. ஆனால் அதற்குமேல் நமக்கு நேரம் எங்கே கிடைக்கிறது?"

"5BX என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"

'இல்லை' என்று தலையாட்டினான் சாரங்கன்.

"ராயல் கெனேடியன் ஏர் ஃபோர்ஸில் பலவித ஆராய்ச்சிகளுக்குப் பிறகு 5BX தேகப் பயிற்சிகளை உருவாக்கியிருக்கிறார்கள். மிகக் குறைந்த நேரத்தில் மனிதனுக்குத் தேவையான முழுமையான உடற்பயிற்சி அளிக்கவென்று ஏற்பட்டவை. 'நேரமாச்சு நேரமாச்சு' என்று பரபரக்கும் நம்மைப் போன்ற பட்டணவாசிகளுக்கு ரொம்பவும் ஏற்றவை. ஒரு நாளைக்குப் பதினொரு நிமிஷ நேரம் இந்தப் பயிற்சியில் ஈடுபட்டால் போதும். பெண்களானால் பன்னிரண்டு நிமிஷங்கள்."*

"அப்படியா? ஆச்சரியமாயிருக்கிறதே!" என்றான் சாரங்கன்.

"ஆச்சரியப்படுவதுடன் நிறுத்திக் கொள்ளாமல் பயிற்சிகளைச் செய்வதில் சிரத்தையும் காட்டினால் மன்மதனுடம் இருப்பீர்கள். உங்களுக்குக் கல்யாணம் ஆகி விட்டதா?"

சாரங்கன் இலேசாக வெட்கப்பட்டுச் சிரித்தான். "இன்னும் இல்லை."

"ஒரு வேளை அதைப் பற்றித்தான் ஏதாவது பேச வந்தீர்களோ என்னிடம்?"

"உம்... அப்படியும் வைத்துக் கொள்ளலாம்."

"பலே! பலே! யாரையாவது சம்சார பந்தத்தில் சிக்க வைப்பது என்றால் எனக்கு ரொம்பக் குஷி. சரி, நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள்? சூடாக எதுவும் கிடைக்காது. என் அம்மாவை வேளை கெட்ட வேளையில் காப்பி போடு. ஓவலைக் கொண்டா என்று நான் தொந்தரவு செய்வதில்லை. சமையல்காரனை வைத்துக் கொள்ள அவள் அனுமதிக்க மாட்டேன் என்கிறாள். 'குடியா குடித்தனமா? நீ ஒருத்தன்தானேடா? சமைத்துப் போட முடியாதா என்னால்?' என்கிறாள். அபரிமிதமான அன்பும் ஒரு வகையில் தொந்தரவுதான் இல்லையா?"

"எனக்குக் காப்பி தர முடியவில்லை என்பதற்காக உங்கள் அம்மா உங்களிடம் வைத்திருக்கும் அன்பைத் தொந்தரவு என்று சொல்லாதீர்கள். எனக்குச் சாப்பிட எதுவுமே இல்லாவிட்டாலும் பரவாயில்லை."

"அன்பினாலேயே வயிற்றை நிரப்பிக் கொள்கிறேன் என்கிறீர்கள். ஆல்ரைட்.

---

* இந்த 5BX (11 நிமிஷம்) XBX (12 நிமிஷம்) தேகப்பயிற்சிகள் பற்றி மேலும் விவரங்கள் அறிய விரும்புவோர்: Physical Fitness என்ற தலைப்பில் உள்ள புத்தகத்தைப் படித்துப் பயன் பெறலாம். Penguin Book No: 2055.

சற்று இருங்கள். அன்பு கொண்டு வருகிறேன்!''

வேணுகோபால் உள்ளே போய் ஒரு தட்டில் சிறிது தேன்குழலும் ஒரு கண்ணாடி டம்ளரில் முக்கால் பாகம் எலுமிச்சம் பழ சர்ப்பத்தும் எடுத்து வந்தான்.

''இதைத்தான் அன்பு என்று குறிப்பிட்டீர்களா?''

''தேன்குழல் செய்வதென்றால் சுலபமா, சொல்லுங்கள். இதெல்லாம் எதற்காக அம்மா செய்து அவஸ்தைப்படுகிறாய்? பேசாமல் ராஜாஜி எழுதிய ராமாயணத்தையோ, பாரதத்தையோ படித்துக் கொண்டு உட்கார்ந்திரேன் என்றால் கேட்க மாட்டாள். 'உனக்குச் செய்வதில் எனக்கென்னடா சிரமம்?' என்கிறாள்.''



''அன்பினால் உருவான தேன்குழல் நன்றாகத்தான் இருக்கிறது'' என்றான் சாரங்கன், அதைச் சுவைத்துக் கொண்டே. ''உப்புதான் கொஞ்சம் தூக்கலாகப் போய் விட்டது!'' சிரித்தான் அவன்.

''அதற்கு விஞ்ஞான ரீதியாக ஒரு விளக்கம் இருக்கிறது, சாரங்கன்! இதைச் செய்தவள் என் அம்மா. மாவை ருசி பார்த்தபோது அவளுக்கு உப்பு தூக்கலாகவே தோன்றியிராது. ஏன் தெரியுமா? வயது ஆக ஆக, நாக்கில் உள்ள ருசி பார்க்கும் நரம்புகளின் சக்தி குறைகிறது. அப்போது உப்பு, காரம் எல்லாமே கொஞ்சம் மிகுதியாக இருந்தால்தான் நன்றாயிருப்பதாகத் தோன்றும்!''

''வெரி இன்டரஸ்டிங்'' என்றான் சாரங்கன்.

''சும்மா மரியாதைக்குச் சொல்கிறீர்கள், சுவாரசியமாக இருக்கிறதென்று. நீங்கள் வந்த விஷயத்தைக் கேட்காமல் நான் உங்களை 'போர்' அடித்துக் கொண்டிருக்கிறேன்.''

''போர் ஒன்றுமில்லை. ஆனால் நான் உங்களிடம் பேச வந்த விஷயமும் ரொம்ப முக்கியமானதுதான்.''

''சொல்லுங்கள்.''

சாரங்கன் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்று சற்று நேரம் யோசித்து விட்டுக் கூறினான்: ''வேணு! நான் சொல்லப் போவது சாருலதாவைப் பற்றி. நியாயமாக நான் இதையெல்லாம் பேசக் கூடாது. நான் அவளுடைய அந்தரங்கக் காரியதரிசி. ரகசியங்களைக் காக்க வேண்டிய பொறுப்பு உள்ளவன். நம்பிக்கைத் துரோகம் செய்யக் கூடாது நான். ஆனால் இப்போதுள்ள நிலைமையை இப்படியே நீடிக்க விடுவது சாருவுக்கே நல்லதல்ல என்பது ஒரு காரணம். நீங்கள் சாருவின் நல்வாழ்வில் உண்மை அக்கறை கொண்டுள்ளவர் என்பது இன்னொரு காரணம். மூன்றாவதாக...''

''மூன்றாவதாக?''

''நான் அவளுக்குக் கீழே வேலை செய்கிறவன். அவளிடம் கீழ்ப்படிந்துதான் நடக்க முடிகிறதே தவிர, யோசனை சொல்லவோ வாதாடவோ என்றால் முடியவில்லை. அதற்கெல்லாம் அவள் அதிகமாக இடம் தருவதில்லை. உத்தரவுகளைப் பிறப்பித்தே பழகி விட்டாள்.''

''ரொம்ப சரி, உங்கள் சங்கடம் எனக்குப் புரிகிறது.''

''ஆனால் வேணு, உங்கள் நிலைமை வேறு. நீங்கள் அவளுக்கு அறிவுரைகளைத் தாராளமாய் வழங்கலாம். அதற்கு உரிமையுண்டு.''

''நான் அறிவுரை வழங்கலாம்; அவ்வப்போது வழங்கியும் வருகிறேன். ஆனால் அவள் எதையும் கேட்பதில்லை. உபதேசிக்க எனக்கு உரிமை உண்டு; அதன்படி நடக்காதிருக்க அவளுக்கு உரிமை உண்டு!''

''அது உண்மைதான். ஆனால் நீங்கள் சொல்வதை அவள் கேட்காது போனாலும் எச்சரித்து விட்டோம் என்ற திருப்தியாவது உங்களுக்கு இருக்குமில்லையா?''

''கரெக்ட்! சாரங்கன்! உங்களால் அறிவுரை வழங்க முடியாது; ஆனால் எதைப் பற்றி அவளுக்கு யோசனை கூற வேண்டும் என்பது தெரியும்! என்னால் அறிவுரை வழங்க முடியும்; ஆனால் எதைப் பற்றி நான் அவளுக்கு நல்ல விதமாக எடுத்துச் சொல்ல வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள் என்பது எனக்குத் தெரியாது. விசித்திரமான நிலைதான்.''

''இந்தச் சிக்கலைத் தீர்க்கத்தான் நான் எனக்குத் தெரிந்த சில விஷயங்களை உங்களிடம் சொல்லலாம் என்று வந்தேன். ஆனால் நான் இவற்றை உங்களிடம் கூறியதாகச் சாருவுக்குத் தெரியக் கூடாது.''

''அப்படியானால், அவளுக்கு அறிவுரை வழங்கும்போது இந்த விவரம் எனக்கு எப்படித் தெரிய வந்தது என்று அவள் கேட்பாளே, அதற்கு என்ன பதில் சொல்வது?''

''பிரச்னைதான்!''

''அந்தப் பிரச்னையைப் பிறகு கவனிப்போம். நீங்கள் விஷயத்தைச் சொல்லுங்கள்!''

''வேணு! சில நாட்களுக்கு முன்னால் கன்னிமாராவில் நடந்த விருந்தின்போது சாரு உங்களுக்கு ஒரு கடிகாரம் பரிசளித்து என்ன சொன்னாள் நினைவிருக்கிறதா?''

''எந்தவிதமான அதிர்ச்சி ஏற்பட்டாலும் சரி, எங்கள் இருவரிடையிலும் உள்ள நட்பு 'ஷாக்புரூ'பாக இருந்து நிலைக்க வேண்டும் என்றாள்.''

''அதன் உள்ளர்த்தம் புரிந்ததா உங்களுக்கு?''

''உள்ளர்த்தத்தோடு அவள் பேசியதாக நான் நினைக்கவேயில்லை!''

''அதிர்ச்சி என்று அவள் எதைக் குறிப்பிட்டாள் என்று நான் சொல்லப் போகிறேன். வேணு! சாரு பிளாக் மெயில் செய்யப் படுகிறாள்!''

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள் தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோ ஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைன்ட்**
**'ஆஸ்ப்ரோ'** அதிவேகமாக
**வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிகோலஸ் தயாரிப்பு

உட்கார்ந்திருந்த ஆசனத்தை விட்டு விருட்டென்று எழுந்தான் வேணு. ''நிஜமாகவா? ஏன், எதற்காக, யார் அவளைத் துன்புறுத்துகிறார்கள்?'' என்று பரபரப்புடன் கேட்டான்.

''ஏன், எதற்காக, என்றெல்லாம் எனக்கும் தெரியாது. மஹிபால், சந்திரபால் என்று இருவர் அடிக்கடி வந்து போகிறார்கள்.''

''மஹிபால்... சந்திரபால்... யார் அந்த அயோக்கியர்கள்?''

''யாரென்று தெரியாது. எங்கிருந்து வருகிறார்கள் என்பதற்கும் தகவல் ஏதும் கிடையாது. மஹிபால், சந்திரபால் என்பவை அவர்களுடைய உண்மைப் பெயர்களாயிராது என்றும் சந்தேகிக்கிறேன். ஒவ்வொரு தடவையும் பத்தாயிரம், இருபதாயிரம் என்று அவர்களுக்கு அள்ளிக் கொடுக்கிறாள்.''

''அடப் பாவிகளா! ஆயிரம் இரண்டாயிரம் போதாதாமா?''

''இந்த விவரத்தை யார் மூலமாகவாவது என்றாவது நீங்கள் தெரிந்து 'கொண்டுவிட நேர்ந்தால் அதன் பிறகும் உங்களுக்குச் சாருவிடம் உள்ள நட்பு நீடிக்குமா? அல்லது உங்களுக்குச் 'சீ' என்று போய் விடுமா?—இதுதான் இன்று சாருவுக்குள்ள மிகப் பெரிய மனப் போராட்டம். அதனால்தான் அன்று அவள் அப்படிச் சூசகமாகப் பேசினாள்!''

புதிராக விளங்கிய பல விஷயங்கள் இப்போது புரிந்தன போலிருந்தது: அதே சமயம் வேறு பல புதிய, பெரிய புதிர்களும் வேணுவின் எதிரே நின்று அவனைக் குழப்பின.

''எங்களிடையே உள்ள தொடர்பைக் குறிக்க நட்பு என்ற சொல்லைத் தான் அடிக்கடி சாரு பயன்படுத்தி வருகிறாள், சாரங்கன். ஆனால் என் மனநிலை வேறு. உங்களை என் சகோதரன் போல் பாவித்து வெட்கமின்றிச் சொல்கிறேன். அவளை நான் காதலிக்கிறேன். இல்லை, அப்படிச் சொன்னால் போதாது. அதற்கும் மேம்பட்ட ஒரு நெருக்கமான நிலையை நான் உணர்கிறேன், புரிகிறதா?''

''புரிந்து கொள்ள முயல்கிறேன்.''

''சாதாரணமான ஓர் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையில் அன்பு துளிர்த்தால் அதைக் காதல் என்று வர்ணித்து விட்டுப் போகலாம். கருத்தொருமித்த காதல் என்கிறோம். ஆனால் சாரு அசாதாரணமானவள். அவளிடம் நெருங்கிப் பழகும் எந்த ஆடவனும் அவளிடம் சில குறைபாடுகளைக் காணத்தான் செய்வான். அவை என்ன என்று உங்களுக்கே தெரியும்.''

சாரங்கன் தலையாட்டினான். ''முன்னுக்கு வரவேண்டும் என்ற ஆர்வம்;

---

அட்டைப் படக் கவிதை

## ஒரு குடையில்





அவன் :

உனக்கு வேண்டாம் குடையென்றால்
எனக்கும் வேண்டாம், நில் சற்றே!
உனக்குச் சாரல் பிரியமென்றால்
எனக்கும் பிரியம்தான் பெண் சிட்டே!

பிணங்க வேண்டாம், கைக்குடையைப்
பிரித்தே காற்றில் வீசிடலாம்.
இணங்கி வந்தால் இருவருமே
இனிதாய் இல்லம் ஏகிடலாம்!

அவள் :

'நானும் நீரும் ஒரு குடைக்கீழ்
நடந்தால் உலகம் என்சொல்லும்?
வானம் உதறும் பூஞ்சிதறல்
வடிந்தால் வருவேன், நீர் செல்லும்!'

என்றால், புத்தகம் நனைந்துவிடும்:
ஏடும் எழுத்தும் சிதைந்துவிடும்.
நன்றாய் வந்தது இம்மழையே,
நடவும் போவோம் நம்வழியே!

— லேமன்

அதற்காக அவள் கடைப்பிடிக்கும் வழிகள்....''

''நீங்கள் மரியாதையுடன் வார்த்தைகளைப் பயன்படுத்துகிறீர்கள். நான் அப்பட்டமாகச் சொல்கிறேன், கேளுங்கள். லஞ்சம், ஊழல், மோசடி, தந்திரங்கள் இத்தியாதி தவிர, கவர்ச்சிகரமான தன் தோற்றத்தையே அவள் காரியங்களைச் சாதித்துக் கொண்டு போகப் பயன்படுத்துகிறாள். தன் கையாலேயே பலருக்கு மது வழங்கவும் அவள் தவறுவதில்லை—எல்லாம் பணம் பண்ண வேண்டும் என்ற ஒரே நோக்கத்துக்காக.''

''நீங்கள் பேசுவதைக் கேட்கவே எனக்குப் பயமாயிருக்கிறது. சாரு பரிசுத்தமானவள் என்பதில் எனக்கு லவலேசமும் சந்தேகமில்லை.''

''அந்த நம்பிக்கை எனக்கும் உண்டு. சேற்றில் நீ செந்தாமரை என்று அவளிடமே நான் கூறியிருக்கிறேன். ஆனால் அதையே வேறுவிதமாக — அருவருப்பூட்டும் விதமாக — வர்ணிக்கவும் என்னால் முடியும். 'ஏனப்பா, சாக்கடையில் உழல்கிறாய்' என்று நான் உங்களைக் கேட்டால், 'வெற்றுடம்புடனா புரள்கிறேன்? ஆடைகளையெல்லாம் அணிந்து கொண்டுதானே சாக்கடையில் இறங்கி யிருக்கிறேன்!' என்று நீங்கள் சமாதானம் சொல்வீர்களா?''

''உங்கள் வாதத்துக்கு என்னிடம் பதில் இல்லை.''

''இருக்க முடியாது! இப்படிப்பட்ட ஒரு பெண்ணைத் தன்மானமுள்ள எந்த ஆண் பிள்ளை காதலிப்பான்? அவள் அழகில் மோகம் கொண்டு அவளை மணக்க முன்வரலாம்; அவள் பணத்துக்கு ஆசைப்பட்டு அவளைக் கல்யாணம் செய்து கொள்ளலாம். ஆனால் காதலுக்கு அங்கு இடமேது?''

சாரங்கன் தலையசைத்தான், இடையாது என்று.

''ஆனால் எனக்கு அவளிடம் உள்ள குற்றங் குறைகளெல்லாம் நன்றாகத் தெரிந்திருந்தும் அவற்றையும் மீறிக் காதல் உணர்ச்சி பொங்குகிறது. கருத்து வேறுபாடுகள் என்று பார்த்தால் எனக்கும் அவளுக்கும் இடையில் மலைக்கும் மடுவுக்கும் இடையில் உள்ள வித்தியாசம் இருக்கிறது. ஆனாலும் நான் அவளைக் காதலிக்கிறேன்!''

விசித்திரமான ஒரு பிரகிருதியைப் பார்ப்பதுபோல் சாரங்கன் வேணுவை நோக்கினான். ''அதனால்தான் காதலை விட மேம்பட்ட ஒரு நிலை என்று குறிப்பிட்டீர்களா?''

''அப்படி அதை வர்ணிப்பதா அல்லது எனக்கு மூளைக் கோளாறு என்று முடிவு கட்டுவதா என்றே எனக்குச் சில சமயங்களில் சந்தேகமாகப் போய் விடுகிறது. ஆனால் அவளிடம் எனக்குள்ள அளவில்லாத காதல் பற்றி மட்டும் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை!''

''இத்தனை அன்புடன் காத்திருக்கும் உங்களை அவள் ஏன் கல்யாணம் செய்துகொள்ளாமல் காலம் கடத்துகிறாள்? குணவின் கல்யாணத்துக்கு இருக்கும் தடையும் நீங்கிவிடுமே?''

''அதுதான் எனக்குப் புரியவில்லை. கல்யாணம், தொழில் வர்த்தகத் துறையில் தான் அடைந்து வரும் துரிதமான முன்னேற்றத்துக்குத் தடை என்று அவள் சொல்லி வருவது நொண்டிச் சாக்கு என்று நான் நினைத்தேன். என் ஊகம் சரி என்று இன்று நீங்கள் கொண்டு வந்திருக்கும் செய்தி நிரூபிக்கிறது. அவளுடைய கடந்த கால வாழ்க்கையில் ஏதோ ரகசியம் இருக்கிறது. அதை வைத்துக்தானே இப்போது அவளை 'ப்ளாக் மெயில்' செய்கிறார்கள்? திருமணம் வேண்டாம் என்று அவள் தீர்மானமாகக் கூறுவதற்கும் அந்த ரகசியமே காரணமாய் இருக்கலாம் அல்லவா?''

''அந்த ரகசியம் என்னவென்று நாம் கண்டுபிடிக்க வேண்டும்.''

''எப்படிக் கண்டுபிடிப்பது? உங்களுக்கு ஏதேனும் வழி தோன்றுகிறதா?''

சாரங்கன் யோசித்தான். சட்டென்று அவன் பரபரப்புடன் நிமிர்ந்தான். ''மஹிபாலும், சந்திரபாலும் அவளை முதன் முதலில் பார்க்க வந்த போது அவர்கள் தேடிக் கொண்டிருந்த பெண் சாரு இல்லை என்று சொல்லி அனுப்பிவிடப் பார்த்தேன். ஆனால் அவர்கள் மசியவில்லை. 'புனிதமான கங்கை நதிக்கரையில் யாராவது பாபம் பண்ணத் துணிவார்களா?' என்று அவளைக் கேளுங்கள். எங்களைப் பார்க்க உடனே சம்மதிப்பாள்' என்றார்கள். அவர்கள் சொன்னபடியேதான் நடந்தது!''

''இந்தத் தகவல் நமக்கு எந்த விதத்தில் உதவப் போகிறது? கங்கை இமய மலைச் சிகரங்களில் உற்பத்தியாகி வங்கக் கடலில் விழுகிறது. வழியில் எத்தனையோ ஊர்கள், புனித ஸ்தலங்கள். எங்கே என்று போய் யாரை என்று விசாரிப்பது?''

''அதொன்றும் நடக்காத காரியம்.''

இருவருமே யோசனையில் ஆழ்ந்தார்கள். சில நிமிஷங்களுக்குப் பிறகு

சாரங்கன் பேசியபோது அனுதாபம் பொங்கியது அவன் குரலில்.

"சாருலதாவிடம் உள்ள குற்றம் குறைகளை நீங்கள் சற்றுமுன் பெரிதுபடுத்திச் சொன்னீர்கள். ஆனால் அழகும், மதுவும், லஞ்சமும் ஊழலும் மட்டும்தான் இந்தத் தொழில் வர்த்தக சாம்ராஜ்யத்தை உருவாக்கியதாகச் சொல்லிவிட முடியுமா?"

"சாரங்கன்! நான் அப்படி நினைக்கவில்லை. வேறு யாராவது அப்படிப் பேசினாலும் நான் அவனுடன் சண்டைக்குப் போகத் தயார்!"

"சாரு ஒரு மேதை, வேணு! அருகிலிருந்து அவள் செயல் திறனைப் பார்த்துப் பார்த்துப் பிரமித்தவன் நான்."

"நீங்கள் மட்டுமென்ன? தொழில் வர்த்தகத் துறையில் விஷயஞானமுள்ள எவருமே பாராட்டத்தான் செய்வார்கள்; அல்லது பொறாமைப்படுவார்கள். அற்பக் காரியங்களில் இறங்காமலே இந்த அளவுக்கு முன்னேறும் ஆற்றல் அவளுக்கு உண்டு என்பதுதான் என் வாதம். இதை அவளிடமே பல தடவைகள் சொல்லியிருக்கிறேன், நான்."

"எவ்வளவு நன்னம்பிக்கையுடன் அலட்சியமாகக் காரியங்களைச் செய்து கொண்டு போவாள்! இன்று அதே சாரு பரிதாபப்படும்படி நடந்துகொள்கிறாள். தவற்றுக்கு மேல் தவறுகள், எடுத்ததற்கெல்லாம் கோபம், அர்த்தமற்ற குற்றச்சாட்டுகள்."

"நான் ஒருத்தன் இருந்து என்ன பிரயோஜனம், சொல்லுங்கள்? என்னை அடிக்கடி சந்திப்பதன் மூலம் என்னிடமிருந்துதான் அவள் தன் சாதனைகளுக்குப் பலம் பெறுவதாக ஒப்புக்கொண்டதை அன்று பார்ட்டியின்போது கேட்டீர்கள்." வேணுவின் வலக்கரம் இடக் கரத்தில் இருந்த கடிகாரத்தை அன்புடன் தடவிக் கொடுத்தது.

"ஆனால் இன்று நான்கூட உதவ முடியாத அளவுக்கு மனச் சோர்வு அவளை ஒரு பெரும் வியாதியாகப் பிடித்திருக்கிறது போலும்!"

"மனச் சோர்வு என்று அதைச் சொல்ல முடியாது வேணு."

"அப்ஸெஷன்?"

"அதுதான் சரியான வார்த்தை. மஹிபாலுக்கும் சந்திரபாலுக்கும் கொடுத்து அழ மேலும் மேலும் கறுப்புப் பணம் பண்ணுவது எப்படி என்ற ஒரே பிரச்னை தான். மற்ற எதிலும் மனம் செல்ல மாட்டேனென்கிறது. சென்றாலும் சிந்தித்து நல்ல முடிவுக்கு வர முடியவில்லை அவளால்."

''பாவம்'' என்றான் வேணுகோபால். காதல் என்ற சொல் சாருவுக்குக் கசக்கக் காரணம் என்ன என்பதைப் புரிந்து கொண்ட தினத்திலிருந்தே அவன் உள்ளத்தில் அலை அலையாகப் பொங்கிய பரிவும் பச்சாத்தாபமும் சாருவின் நினைவைக்கூடத் தாலாட்டிக் கொண்டிருந்தன ஆறுதலாக. 'ப்ளாக் மெயில் செய்யப்படும் அளவுக்கு அவளுக்கு மேலும் பல சோதனைகளா? எத்தனை துன்ப நினைவுகளை அந்தப் பேதை உள்ளம் சுமந்து நலிகிறதோ?'

''ஓர் உதாரணம் பாருங்கள்''-சாரங்கன் கூறிக் கொண்டு போனான்: ''பரத்வாஜ் ஷேர்களின் மதிப்புக் குறைந்து வருகிறது என்றும் இது நல்ல தருணம் என்றும் சொல்லி மளமளவென்று வாங்க ஆரம்பித்தாள். சமீபத்திய பாலன்ஸ் ஷீட்டைச் சரியாக ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? இவள் வாங்குகிறாள் என்று தெரிந்ததும் விலை கூடியது. எச்சரித்தும் கேட்கவில்லை. யோசிக்காமல் வீம்புத்தனமாகப் பல பங்குகளைக் 'கார்னர்' செய்தாள். கடைசியில் ஒர் உருப்படாத கம்பெனி இவள் தலையில் கட்டப்பட்டிருப்பதுதான் மிச்சம். எக்கச்சக்கமாகக் கடன் பட்டிருக்கிறது அந்தக் கம்பெனி. மோசடிகளும் நடந்திருக்கின்றன.''

''சாருவா இப்படி அசட்டுத்தனமாக நடந்து கொண்டாள்? நம்பவே முடியவில்லையே!''

''அதுவாவது போகட்டும். கம்பெனி விவகாரம். அவள் பணம். லாபமோ நஷ்டமோ இஷ்டப்படி நடக்க அவளுக்கு உரிமை உண்டு. ஆனால் மற்றவர்களுடைய சொந்த வாழ்க்கையில் இவள் தலையிடலாமா? ராமலிங்கம் மகளை நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமாம்! எனக்கு ஒரே கோபம். 'மூளை பிசகிவிட்டதா உனக்கு' என்றே கேட்டு விட்டேன்.''

''கம்பெனி விவகாரங்களையே அவளால் சரியாகக் கவனிக்க முடியாத நிலையில் மற்றவர் மனங்களை எப்படிப் புரிந்து கொள்ள முடியும் சாரங்கன்? நீங்கள் ஆத்திரப்படக் கூடாது. அநுதாபத்துடன் நோக்க வேண்டும்.''

''ரொம்ப சரி, வேணு! அதை உடனேயே நான் உணர்ந்து மன்னிப்புக் கேட்டேன். ஆனாலும் பாருங்கள், மறுநாள் நான் இல்லாதபோது லில்லியைக் கூப்பிட்டுக் கண்டபடி ஏசியிருக்கிறாள். என்னோடு சேர்ந்து கூத்தடிக்கிறாளாம், காதல் நாடகம் போடுகிறாளாம். ஆபீஸில் மொரேல் கெட்டுப் போச்சாம்! லில்லி என்னிடம் சொல்லிக் கதறி விட்டாள். அவளைச் சமாதானப்படுத்துவது பெரும் பாடாகப் போய்விட்டது!''

''லில்லியை நீங்கள் காதலிக்கிறீர்களா?''

''அதில் ஒன்றும் ரகசியம் இல்லை. இதற்குள் கல்யாணமே நடந்து முடிந்திருக்கும். ஆனால் லில்லிதான் ஒத்திப் போட்டு வருகிறாள். அவளுக்குச் சாரு—வேணு, கமலா—குணா திருமணங்கள் நடந்து பார்க்க வேண்டுமாம். 'அப்புறம்தான் நம் திருமணம்' என்கிறாள்.''

''ரொமாண்டிக் ஐடியல்ஸ்! காதல் கதைகளை ரொம்பவும் படிப்பாள் போலிருக்கிறது.''

''காதலென்றாலே கரைந்துருகும் லில்லி ஒரு பக்கம்; காதல் என்றால் விலை என்ன விலை என்று கேட்கும் ராமலிங்கம் மறுபக்கம். நிச்சயித்த தேதியில் மகளுக்குக் கல்யாணம் நடந்தே ஆக வேண்டும் என்று குதிக்கிறார் அவர். மாப்பிள்ளை யார் என்பது அவருக்கு இரண்டாம்பட்சமாக இருக்கிறது. பஞ்சாங்கத்தைப் புரட்டினால் முகூர்த்த நாட்களுக்குப் பஞ்சமேயில்லை என்று அவருக்கு எடுத்துச் சொல்லிச் சமாதானப்படுத்துவதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது.''

''மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி!''

''மூன்றாவது பக்கத்தை எங்கே விட்டீர்கள்? அன்று பார்ட்டியில் நீங்கள் காலதாமதமாக வரப்போக, சாரு என் மீது பாய்ந்தாள் பாருங்கள். அத்தனை பேர் பார்வையும் என் பேரில்தான். எனக்கு ரொம்ப அவமானமாகப் போய் விட்டது. அவளிடம் உள்ள அனுதாபம் மதிப்பு இவற்றால்தான் பொறுத்துக் கொண்டு போகிறோம் லில்லியும் நானும்.''

வேணு ஒரு நீண்ட பெருமூச்சுடன் எழுந்து அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடக்க ஆரம்பித்தான். ''பிரச்னைகளை நன்றாகப் புரிந்து கொண்டாயிற்று. ஆனால் அவற்றைத் தீர்க்க வழி?''

''அது தெரிந்தால் உங்களிடம் ஏன் வந்திருக்கப் போகிறேன்?'' என்று சாரங்கன் முணுமுணுத்தது அவன் காதில் விழுந்தது. அதை லட்சியம் செய்யாமல் நடையைத் தொடர்ந்தான்.

திடுமென்று நின்று சாரங்கனைப் பார்க்கத் திரும்பினான் வேணுகோபால். ''சாரங்கன்! நீங்கள் மட்டும் பரமயோக்கியனாக இருப்பானேன்? நீங்களும் ஏன் சாருலதாவை 'ப்ளாக் மெயில்' செய்யக்கூடாது?'' என்று கேட்டான்.

**(தொடரும்)**

# இந்த விவசாயிகளிடையே பொதுவாகக் காண்பது என்ன?



## ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்டும், அதன்மூலம் கிடைத்த சுபிட்ச வாழ்வும்.

நாடெங்கும் உள்ள விவசாயிகளின் வாழ்வை வளம் கொழிக்க வகை செய்வது, பெஸ்ட் அண்ட் கம்பெனி தயாரிக்கும் நம்பகமான ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்டுகள்.

ஈடு இணையற்றது என்று புகழ் பெற்ற 'மானோபிளாக்' பம்பு செட்டுகள் உட்பட பலவகை சென்ட்ரிப்யூகல் பம்புகளையும் பெஸ்ட் அளிக்கிறது. ஓர்த்திங்டன்-சிம்ப்ஸன் பம்பு செட்டுகள் கண்டிப்பான தரக்கட்டுப்பாட்டுடன் தயாரிக்கப்படுபவை. விற்பனைக்குப் பிறகும் சேவை செய்ய, நாடெங்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், தக்க பம்புகளை தேர்ந்தெடுப்பதற்கு ஆலோசனைகளையும் அளிக்கிறது. பெஸ்ட்!






**பெஸ்ட் & கம்பெனி பிரைவேட் லிட்.**

(ஸ்தாபிதம் : 1879)
13/15, நார்த் பீச் ரோடு, சென்னை-1.

தமிழ் நாட்டில் கிளைகள்:
6/434 திருச்சி ரோடு, கோயமுத்தூர்.
49-D, மதுரை ரோடு, திருச்சி-1.

Focus.BC.191 Tam (a)




# நகலும் நிஜமும்

ஜி.எஸ். பாலகிருஷ்ணன்

ஸப்ரெஜிஸ்திரார் சுப்புராவுக்கு வெற்றிலை சீவலுக்கு அடுத்தபடியாக மிகவும் பிடித்தது துப்பறியும் நாவல்கள். மீசை கருகருவென்றிருந்த அந்தக் காலத்தில் வடுவூரென்ன, ரங்கராஜு என்ன, கோதைநாயகி அம்மாளென்ன என்று அவர் படித்துத் தீர்த்திருந்த துப்பறியும் நாவல்களின் எண்ணிக்கை கணக்கிலடங்கா! தமிழ் நாவல்களுடன் ஆங்கிலத்தில் வெளி வந்து கொண்டிருந்த 'ரெய்னால்ட்ஸ்' நாவல்களையும் அவர் கரைத்துப் படிப்பார். அவருடைய கருத்துப்படி வாழ்க்கை என்ற அசல் அசம்பாவிதங்கள் நிறைந்த கனவு இல்லாத காலக் குவியல். இலக்கியம் என்ற நகலோ மனித மனத்துக்குத் தேவையான விழிப்புணர்ச்சியையும் விருவிருப்பையும் தரும் ஒரு சாதனம்... மற்ற இலக்கிய சிருஷ்டிகளைவிடத் துப்பறியும் நாவல்களுக்கு ஒரு தனி மவுசுண்டு. தளர்ந்துவிடக்கும் உள்ளத்துக்குத் தெம்பு தேடித் தரும் 'டானிக்' என்று அவற்றைக் குறிப்பிடலாம். எப்படி உடம்புக்கு வைட்டமின்கள் தேவையோ, அப்படியே மனத்துக்குத் துப்பறியும் நாவல்கள் தரும் இனிமை தேவை....

துப்பறியும் நாவல்கள் படித்துப் படித்துத் தனக்கும் ஒரு பிரபல துப்பறியும் நிபுணராக வேண்டும் என்ற ஆசை ராவுஜிக்கு ஏற்பட்டது இன்று நேற்றல்ல. ஜலந்தரிலிருந்து 'எட்டே நாட்களில் துப்பறியும் நிபுணராகும் முறை'யைத் தபாலில் வரவழைத்துப் படித்தார். இன்னும் பூதக்கண்ணாடிகள், பொய்த் தாடிகள், புகைக்கண்ணாடிகள், பல தெருக்களின் மேப் அடங்கிய பாட்டில்கள் முதலியவற்றையும் மேஜையின் மீது அடுக்கி வைத்திருந்தார். ஆனால் கடைசியில் ஆசையெல்லாம் வீணாகிறது. நமது நாட்டில் 'பிரைவேட் டிடெக்டிவ்'கள் உண்டா என்ன? (இது

பற்றி ராவுஜி 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' எழுதினது தனிக் கதை) வயிற்றுப் பிழைப்புக்காக அவர் வாசகசாலை நூலகராக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சில வருடங்கள்வரையில் தம் இலட்சியங்கள் என்றுமே நிறைவேறியே தீரும், தாம் தமிழ் நாட்டு 'ஷெர்லாக் ஹோம்ஸா'வது நிச்சயம் என்று கனவு கண்டார். ஆனால் யமுனாபாய் 'ராம லட்சுமணர்களாட்டம் இரட்டைக் குழந்தைகளைப் பெற்றபொழுது — ஏற்கனவே பெரிதாக இருந்த குடும்பத்தை இன்னும் பெரிதாக்கிப் பொருளாதாரப் பிரச்னைகளைப் பூதாகாரமாக்கியபொழுது — இனிமேல் இலட்சியம், மண்ணாங்கட்டி எல்லாவற்றையும் மூட்டை கட்டி வைத்துவிட வேண்டியதுதான் என்று தீர்மானித்தார். துப்பறியும் நவீனங்களைத் தொடர்ந்து படிப்பதை மட்டும் கைவிடவில்லை. ஃபாதர் ப்ரௌன் கதைகளிலிருந்து நேற்று வெளிவந்த ஜேம்ஸ்பாண்ட் கதை வரையில் அத்தனையும் அவருக்கு மனப்பாடம். ஏன், சொந்தக் கற்பனையை ஓடவிட்டு, 'நூலகத்தில் கொலை' அல்லது 'நல்லவர்கள் வெல்வார்கள்' என்று ஒரு துப்பறியும் நாவல் வரைந்து பெட்டியில் பதுக்கியிருந்தது யமுனா பாய்க்குக்கூடத் தெரியாது. என்றும் மக்களிடையே துப்பறியும் நாவல்களுக்கு மதிப்பு ஏற்படும் காலம் வராமலா இருக்கப் போகிறது? எத்தனை நாளைக்குத்தான் வாசகர்கள் ஆண் — பெண் உறவு சம்பந்தமான ஆபாச அக்கப்போர்களைப் படித்துக்கொண்டிருக்கப் போகிறார்கள்? அப்படி ஒரு நல்ல










காலம் பிறக்கையில் அவர் நாவல் அச்சேறுமலா இருக்கப் போகிறது? கப்புராவுக்கு வாழ்க்கையின் மீது பிடிப்பும், நம்பிக்கையும் அதிகம். எளிதில் மனம் தளர்ந்துவிடக் கூடியவரில்லை அவர்...

ஏன், சாந்துப் பொட்டு சக்குபாய் அந்த நாளில் அவரைக் காதலிப்பது போல் பாசாங்கு செய்து, ஏமாற்றிவிட்டு, முடிவில் எவனோ நாடக நடிகனுடன் சிங்கப்பூருக்குக் கப்பலேறின போதுகூட அவர் மனம் கலங்கிப் பித்தனாகவில்லை. ஒவ்வொரு சமயம் அந்த மாய்மாலக்காரி தம்மை மயக்கிவிட்டுப்பின் மறைந்தது அவர் மனத்தின் அடித்தளத்தில் வேதனையின் ஒலிகளை எழுப்ப முயலும்.

லேப்ரேரியன் கப்புராவ் தமக்குத்தாமே சிரித்துக் கொண்டார்.

''என்னங்காணும் கப்புராவ், ஒரே குஷியாக இருக்கிறீர்?'' என்று கேட்டபடி குடை சகிதம் அவர் அறைக்குள் நுழைந்தார் நண்பர் பாஷ்யம் அய்யங்கார்.

'' இப்படி உட்காரும், சொல்கிறேன் '' என்று ஒரு நாற்காலியைக் காட்டினார் கப்புராவ். பிறகு தம்முடைய மர்மச் சிரிப்புக்கு என்ன காரணம் என்பதை விளக்கினார்.

சென்ற பதினைந்து ஆண்டுகளாக நூலகத்திலிருக்கும் புத்தகங்களை வைத்துக் கொண்டே துப்பறியும் தொழில் பழகியிருக்கிறார் ராவுஜி. முகம் தெரியாத ஒரு வாசகன் நீண்ட காலமாகப் படித்து வரும் நூல்களைக் கொண்டே, அவன் எப்படி இருப்பான் என்று ஊகித்து அறிந்திருந்தார். தம் ஊகம் சரிதானா என்று மறுதினம் கண்டுபிடிக்கத் தீர்மானித்திருந்தார். (ரிடையராவதற்கு இன்னும் சில



இனங்கள்தானே இருந்தன? எல்லாம்) நாம் அனுமானித்தது போலவே இருந்தால், நாம் துப்பறியும் தொழிலுக்கு வேண்டிய தகுதிகள் உடையவர் என்பது நிதரிசனமாகுமல்லவா?.... அதிலே ஓர் ஆத்ம திருப்தி.

ஆராய்ச்சிக்காக எடுத்துக் கொண்ட நபரின் நூலக நம்பர் மட்டும்தான் தெரியும். அவர் முகம், கறுப்பா, சிவப்பா என்று கூட ராவுஜிக்குத் தெரியாது. தப்பித் தவறி அவர் யார் என்று தம்மிடம் வெளியிட்டு விடக் கூடாது என்று உதவி லைப்ரேரியன்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். ராவுஜியின் உத்தரவைச் சிரமேற் கொண்ட உதவியாளர்கள் உஷாராயிருந்தார்கள். அவர்களுக்குத் தெரியும், குறிப்பிட்ட வாசகரின் பெயர் முதலியன. அது மட்டுமா? இந்தப் பதினைந்து ஆண்டுகளில் அந்த வாசகர் ஒரு தடவைகூட நூலகத்துக்கு வந்ததில்லை. யார் யாரோ அவர் டிக்கெட்டைத் தந்து புத்தகம் எடுத்துச் செல்வது வழக்கம்.

பதினைந்து ஆண்டுகளாக ராயர் குறிப்பெடுத்ததின் பலனுகக் கண்டறிந்திருந்த உண்மைகள் பல. முதல் இரண்டு ஆண்டுகள் ஆராய்ச்சிக்காக எடுத்துக் கொண்ட நபர் படித்த புத்தகங்கள் அத்தனையும் ஒரே காதல் மயம்! முக்கியமாகக் கவிதையில்தான் அவர் மனம் ஈடுபட்டிருந்தது போலும். அவர் படித்த புத்தகங்களின் பெயர்கள், 'நிலவுக் குமரி', 'ரோஜா ராணி', 'மலர்விழியாள்', 'காதல் என்னும் தேன்', 'காதல் என்னும் அரும்பு', 'காதல் கோவில்', 'காதலா கடமையா?' என்ற ரீதியில் ஓடின. (பயல் கட்டைப் பிரம்மச்சாரி: கனவு காணும் பருவம் என்று குறிப்புக்களில் நீலப் பென்ஸிலில் எழுதியிருந்தார் ராவுஜி.) அடுத்த சில வருடங்கள் திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்த கதைகளையும், பிசாசுக் கதைகளையும் படித்துத் தீர்த்திருந்தார். மாதிரிக்குச் சில தலைப்புகள். 'ரயிலில் வந்த பிணம்', 'பாழடைந்த பங்களா' 'பிசாசா மோகினியா?' 'கப்பலில் நடந்த கொலை', 'இரவில் வந்த உருவம்', 'முகமூடி ராதா'—இத்தியாதி. தொடர்ந்து அவர் படித்திருந்த புத்தகங்களின் தலைப்புக்கள் 'மணமகனுக்குச் சில பொன்மொழிகள்', 'கல்யாணமானபின்னும் இன்பமாக வாழ்வதெப்படி?' 'புதுத் தம்பதிகளுக்குச் சில இரகசியமான யோசனைகள்' (இந்தத் தலைப்புக்களுக்கு எதிரில் ராவுஜி பின்வருமாறு எழுதியிருந்தார் — 'இவனுக்கு இன்னும் சில தினங்களில் திருமணம் நடக்கவிருக்கிறது. வயது இருபத்து நாலு எனக் கொள்ளலாம்') சுமார் ஒரு வருட காலத்துக்கு லைப்ரெரி பக்கமே திரும்பவில்லை அந்தப் பொல்லாத வாசகர். ('ஹனிமூன்' கொண்டாடுகிறார் போலும்!) பிறகு அவர் வாங்கிச் சென்றதெல்லாம் குழந்தை வளர்ப்புப் புத்தகங்கள். 'குளிப்பாட்டுவது எப்படி?', 'தூளியை ஆட்டும் கலை', 'அழவிடாமல் விளக்கெண்ணெய் புகட்டுவது எங்ஙனம்?' 'இரட்டைக் குழந்தைகள் — ஒரு பிரச்னையா?', 'பாப்பாக்களுக்குப் பாட்டி வைத்தியம்' இத்தியாதி. (ராவுஜியின் குறிப்பு: — பயல் கல்யாணம் பண்ணிக் கொண்டு அடுத்த கட்டத்தை எதிர்பார்க்கிறான். அநேகமாக மனைவியை 'டெலிவரி'க்காக ஊருக்கு அனுப்பி யிருப்பான். தனிமையைக் கொல்வதற்குத்தான் இந்தப் புத்தகங்கள்.) கடைசி இரண்டு ஆண்டுகளில் அந்த முகம் தெரியாத நபர் படித்திருந்தது அத்தனையும் தத்துவ சம்பந்தமான புத்தகங்கள் — அல்லது மத சம்பந்தமான நூல்கள். தலைப்புக்களைத்தான் பாருங்களேன்! 'ஜீவாத்மாவும் பரமாத்மாவும்', 'மெய்கண்ட ஞானிகள் அறுவரது வாழ்க்கை வரலாறு', 'ஆத்ம விசாரம்', 'நான் யார்?' 'நீ யார்?...' அவர் கடைசியாக வாங்கிச் சென்றிருந்த நூல் 'ரிஷிகேசத்து ஆசிரமங்கள்'!

லைப்ரேரியன் கப்புராவ் தம் காவிப் பல் தெரியக் கடகடவென்று சிரித்தார். பிறகு பின்வருமாறு மொழிந்தார்: ''பயலுக்கு வயது நாற்பதைத் தாண்டியிருக்கும் என்பது என் அனுமானம். குறைந்தது ஆறு குழந்தைகளாவது இருக்கும். சராசரி ஒன்றுக்கு ஏதாவது சீக்கு இருக்கும். ஒண்டுக் குடித்தனம் என்பதில் என்ன சந்தேகம்? வாழ்க்கைப் பிரச்னைகள் அதிகமாகப் போய்த்தான் 'ரிஷிகேசத்து ஆசிரம'ங்களை நாடியிருக்கிறது மனம். லைப்ரேரியில் அங்கத்தினராகச் சேரும் பொழுது கனவு காணும் காளையாக இருந்தவர் இன்று கூன் விழுந்த முதுகுடனும் குழி விழுந்த கண்களுடனும் எலும்புக் கூடாய்க் காட்சியளிப்பார் என்பது என் யூகம். தலையில் கண்டிப்பாக வழுக்கை விழுந்திருக்கும். நீங்கள் காரில் அழைத்துச் செல்வதாக இருந்தால் இப்பொழுதே ஏதாவது சாக்குச் சொல்லி விசாரித்துவிட்டு வருவோம். அந்த நபரின் முழு விலாசம் எங்கள் பைலில் இருக்கிறது.''

''பின்னுங்கள் கப்பு ராவ்! ஷெர்லாக் ஹோம்ஸான உம்முடன் சேர்ந்தால் ஒரு வாட்ஸன் பட்டமாவது எனக்குக் கிடைக்காதா?'' என்று ஊக்கமூட்டினார் பாஷ்யம் அய்யங்கார்.

கார் எங்கெல்லாமோ ஓடியபின் ஒரு பெரிய பங்களா முன்னால் நின்றது. பெரிய தோட்டம். 'நாய் ஜாக்கிரதை' என்ற பலகை. 'கூர்க்கா' மட்டும் இல்லை. ஒரு பையன் ஓடி வந்து இருவரையும் உள்ளே அழைத்துச் சென்றான். லைப்ரேரியன் கப்புராவ் தம் 'கார்டை'த் தந்தார். நூலகத்தில் நீண்ட காலமாக அங்கத்தினராக இருப்பவர்களை நேரில் கண்டு சில புள்ளி விவரங்கள் சேர்க்க விரும்புவதாகக் கூறினார். உள்ளே போய்ப் பத்தே நிமிடங்களில் திரும்பி வந்த பையன் இருவரையும் 'டிராயிங் ரூமி'ல் அமரும்படி வேண்டினான்.

அந்த அறையின் அழகை இருவரும் மெதுவான குரலில் புகழ்ந்து கொண்டிருக்கையில் சக்கரம் போட்ட வண்டியொன்றில் தோன்றினான் ஒரு மாது. அவளைக் கண்டதும் கப்புராவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. சாந்துப் பொட்டு சக்குபாய்! ஒரு காலத்தில் அவரைக் காதலித்துக் கைவிட்டவள். துப்பறியும் நாவல்களில்தான் எதிர்பாராத சம்பவங்கள் நிகழும் என்று எண்ணியிருந்த ராயரின் மனத்தைக் குழப்பம் ஆட்கொண்டது. நிஜ வாழ்விலும்கூட இதுபோன்ற சம்பவங்கள் நிகழுமா? என்ன இருந்தாலும் இலக்கியம் நகல்தானே? வாழ்க்கைதானே அசல்?

# Flex










# தங்களுக்குத் தொண்டு புரிய
## வந்து விட்டன

ஃப்ளெக்ஸ் பாத அணிகள், தோல் சாமான்கள் மீண்டும் இப்பொழுது கடைகளில் கிடைக்கின்றன. ஆசியாவிலேயே மிகப் பெரிய தொழிற்சாலையும், 50 ஆண்டுகளுக்கு மேலாக பிரசித்திபெற்றதுமான ஃப்ளெக்ஸின் நவீன உற்பத்தி ஏற்பாட்டின் கீழ் உருவாக்கப்பட்ட புதிய உற்பத்திகள் இன்றைய நவநாகரீக யுகத்தின் விருப்பத்தையும் தேவையையும் நிறைவு செய்கிறது. சிறந்த பொருளுக்கு எப்பொழுதும் உத்தரவாதம் பெற்ற ஃப்ளெக்ஸ் வியாபாரியிடமே சென்று வாங்குங்கள்.

**புதிய ஏற்பாடு • புதிய உற்பத்தி • புதிய டிசைன் • புதிய கவர்ச்சி**

இந்தச் சின்னத்தைப் பார்த்து வாங்குங்கள்






டானரி & புட்வேர் கார்ப்பரேஷன்
ஆப் இந்தியா லிமிடெட்
(இந்திய அரசின் நிறுவனம்)
தபால் பெட்டி எண்: 329, கான்பூர்

அவன் பேச முயன்றான். ஆனால் குரல் எழவில்லை. 'மருதாணி விரலெங்கே, குரல் எங்கே ?' என்ற கதைத் தலைப்பு ஏனோ சுப்புராவுக்கு நினைவு வந்தது. ஊனக் கால்களுடன் காட்சியளித்த சகுனவைக் கண்டதும் புதுப் புத்தக வாசனை ராவுஜியின் நாசியைத் தாக்கவில்லை. புகை போன்ற இருள்தான் அவர் உள்ளத்தில் கவிந்து மூச்சை அடைக்க வைத்தது : அவர் திணறினார்.

கிணற்றுக்குள்ளிருந்து ஒலித்தது சகுனவின் ஈனமான குரல். "சங்கிலைக் கைவிட்டு ஓடியதற்குச் சரியான தண்டனையை அநுபவிக்கிறேன். எல்லாம் தலைவிதி.... வேறு என்ன சொல்வது? இந்தனை சொத்தையும் ஒரு பிள்ளையையும் விட்டு விட்டு அவர் போய் விட்டார். இருந்த நாளிலும் அப்படியொன்றும் சுகமாக வாழ விடவில்லை. குடியும் கெட்ட பழக்கங்களும்! உங்களுக்கு எதற்கு அந்தக் கதையெல்லாம் ? கடைசியில் காலும் இப்படி ஊனமாகி விட்டது. எதுவும் செய்ய முடியாத நிலை..... காலத்தை நல்ல வழியில் ஓட்டியாக வேண்டுமே! புத்தகங்கள் படிக்கிறேன். ஏராளமாகப் படிக்கிறேன். ஆனால் நூலகத்தில் வந்து விரும்பிய புத்தகங்களைத் தேர்ந்தெடுக்கும் நிலையிலா இருக்கிறேன்? முன் எல்லாம் யார் யாரோ புத்தகங்கள் எடுத்து வந்தார்கள்? இப்பொழுதெல்லாம் குழந்தைதான் எடுத்து வந்துவிடுகிறான். ஒரோரு சமயம் ஆபாசமான குப்பைகளைக் கூட எடுத்து வந்து விடுகிறான். அவனைக் குறை கூறி என்ன பயன்? எதை எடுத்து வந்தாலும் படிக்கிறேன். வேறு வழி ? ஆமாம்... உங்களுக்கு எவ்வளவு குழந்தைகள் ?"

பாஷ்யம் அய்யங்கார் சுப்புராவைப் பார்த்தார். சிம்ம நெஞ்சத்துக்குப் பெயர் போன ராவர் சிலையாக வீற்றிருந்தார்!

---

# கடல் குதிரை



கடல் குதிரை சுமார் இரண்டு அங்குலம் முதல் ஆறு அங்குலம் நீளம் வரை உள்ளது. இதனுடைய தலைப் பகுதி குதிரையின் முகத் தோற்றத்தைக் கொண்டு இருப்பதால் இதற்குக் கடல் குதிரை என்று பெயர்.

கடல் குதிரைக்குத் தோள்பட்டைத் துடுப்பு, மேல் பக்கத் துடுப்பு, பின்பக்கத் துடுப்பு, என்று மூன்று துடுப்புகள் உள்ளன. இத்துடுப்புகள் சிறியவையாகவும் விசிறி போன்றும் காணப்படுகின்றன.

கடல் குதிரை படத்தில் காணப்படுவது போன்று தன் உடலை நேர் செங்குத்தாக இருக்கும்படி வைத்துக் கொண்டு தனது மேல் பக்கத் துடுப்பை அசைப்பதைக் கண்டால் அது தன்னைத் தானே விசிறிக் கொள்வது போன்று விநோதமாகக் காட்சியளிக்கும். கடல் குதிரை அதிக நேரம் நீந்திச் செல்லாது. பெரும்பாலும் கடல் செடி, கொடிகளைப் பற்றிக் கொண்டிருக்கும். கடல் குதிரைகள் செடிகளையொத்த நிறத்தில் இருப்பதால் பகைவர்களிடமிருந்து , பாதுகாப்புப் பெறுகின்றன.

ஆண் கடல் குதிரைதான் குடும்பத்தைப் பெருக்குவதில் அதிக கவனம் செலுத்துகிறது. ஆண் கடல் குதிரையின் வால் தொடங்கும் பகுதியில் பை போன்ற ஒரு பகுதி காணப்படும். இந்தப் பையினுள் பெண் கடல் குதிரையானது தன் முட்டைகளை இடும். பெண் கடல் குதிரைக்குப் பதிலாக ஆண் கடல் குதிரையானது முட்டைகளை மிகப் பத்திரமாக அடை காக்க ஆரம்பிக்கும். முட்டைப் பையின் ஒரு பக்கத்தில் ஒரு சிறிய திறப்பு காணப்படும். இத்திறப்பு பெண் கடல் குதிரைகள் முட்டைகளை இட்டவுடன் அடைபட்டுவிடும். சுமார் நாற்பத்தைந்து நாட்கள் ஆண் கடல் குதிரை இம்முட்டைகளைப் பாதுகாக்கும். அதன் பிறகு சுமார் கால் அங்குலம் நீளமுள்ள இளம் குஞ்சுகள் முட்டையிலிருந்து வெளி வருகின்றன. ஒரு கடல் குதிரையின் முட்டைப் பையில் சுமார் 150 முதல் 200 வரை இளம் குஞ்சுகள் இருக்கும். ஆனால் முட்டைப் பையிலிருந்து வெளிச்செல்லுவதில்லை. ஆண் கடல் குதிரை எவ்வளவுதான் தன் உடலை அங்குமிங்கும் பக்கவாட்டிலும் பலவாறாக அசைத்தாலும் இளம் குஞ்சுகள் ஒன்றுகூட முட்டைப் பையிலிருந்து வெளிவருவதில்லை. மாறாகப் பயத்தால் இளம் குஞ்சுகள் கெட்டியாக முட்டைப் பையின் சுவரைப் பற்றிக் கொள்ளும். இளம் குஞ்சுகள் சற்று வளர்ச்சி அடைந்ததும் வெளிச் செல்லாவிட்டால் ஆண் கடல் குதிரை, குஞ்சுகள் அடங்கிய பை போன்ற பகுதியைப் பாறை அல்லது சிப்பிகளின்மீது வைத்து அழுத்தும். அப்போது முட்டைப் பை சற்று அமுங்கிக் கொடுக்க, இளம் குஞ்சுகள் வெளியேற்றப்படுகின்றன. வெளிவந்த இளங் குஞ்சுகள் செடிகளின் ஊடே மறைந்து வாழ்க்கையைத் தொடங்குகின்றன.

—ஆன்டோனி பேபில்

# ஆடியே வருக...அசையும் பிரிண்ட்களில்



அந்த மெல்லிய மெல்லிய உணர்வோடு தரமான டெரின்/காட்டன் துணிகளிலே புதுமைக் கோட்டையில் நுழைந்திடுவீர். கசங்காமல், கலர்ச்சி கலையாமல் இழைந்திடுவீர். அத்தனையும் அசைந்தாடும் பிரிண்ட்களின் அணிவகுப்பு. மணிமணியான வண்ணங்கள். பாப்ளின் அல்லது [illegible] துணிகளில் கரிதார் தைக்கும்போதுதான் எத்தனை சோபிதம்! அறுபதுக்கும் அதிகமாக வண்ணங்கள். அது மட்டுமல்ல, விதவிதமான துணிகள் அனைத்துமே விதவிதம் கட்டமிட்டவை, புட்டா போட்டவை, புள்ளி வைத்தவை பிரிண்ட் செய்தவை மற்றும் பிளெயின் வண்ணங்கள்.

**TATA** *Textiles* டாடா டெக்ஸ்டைல் பிரிண்ட்கள்

ULKA-TT-115 TAM



நத்தை ஒன்று மாமரத்தின் மீது ஏறிக் கொண்டிருந்தது.

கீழே இருந்த ஓர் அணில் சொல்லியது.

"ஏன் இப்பொழுது போகிறாய்? மேலே இன்னும் பழம் பழுக்கவில்லை."

"நான்போவதற்குள் அவை பழுத்து விடுமே!" என்றது நத்தை.

-இல்லஸ்டிரேடட் வீக்லி - "பாலி"

## ராஷ்டிரபதி 'கிரி'யும் நெய்வேலிக் 'கரி'யும்



ராஷ்டிரபதியாக இருந்துவரும் திரு வி. வி. கிரிக்கும், நெய்வேலிக்கரித் திட்டத்துக்கும் ஏதேனும் தொடர்பு உண்டா?

உண்டு!

1937ஆம் ஆண்டில், நெய்வேலிப் பகுதியில் வெட்டி எடுத்த கரித் தூள்களை ஜெர்மனிக்கும் பரிசிலனை செய்ய அனுப்பி வைத்தவர் திரு வி.வி. கிரி அவர்கள்.-

நெய்வேலித் திட்டம் உருவாகக் காரணமாக இருந்தவர்களில் முக்கியமானவராகவும் இருந்தவராம்!

ஆதாரம்: டாக்டர் வி. வி. கிரி 71வது பிறந்த நாள் மலர்:
- தகவல்: ஏ. சுவாமிநாதன்

## ஆளுக்கு ஒரு வோட்டு; கட்சிக்கு ஒரு வோட்டு

மேற்கு ஜெர்மானிய பார்லிமெண்ட் தேர்தல் முறை பல தனிச் சிறப்புக்களைக் கொண்டுள்ளது. ஒரு கட்சி, மொத்தம் பதிவாகி, செல்லுபடியாகும் வோட்டுக்களில் ஐந்து சதவிகிதமோ அல்லது மூன்று தொகுதிகளிலாவது வெற்றி பெற்றிருந்தாலோதான் அது பாராளுமன்றத்தில் அங்கீகாரம் பெற்றும் பிரதிநிதித்துவம் பெறமுடியும் என்று ஜெர்மன் தேர்தல் சட்டம் கூறுகிறது. கூட்டாட்சிக் குடியரசில் மொத்தம் இருநூற்று நாற்பத்தெட்டு தொகுதிகள் உள்ளன. ஒவ்வொரு தொகுதியிலிருந்தும் ஓர் அங்கத்தினர் வெற்றி பெறுகிறார். ஒவ்வொரு வாக்காளருக்கும் இரு வோட்டுக்கள் உண்டு. ஒன்றை அவர்கள் பார்லிமெண்டுக்குப் போட்டியிடும் வேட்பாளருக்கும் மற்றொன்றைத் தமக்கு விருப்பமான கட்சிக்கும் அளிக்க வேண்டும். இம்முறை மூலம் கிறிஸ்துவ ஜனநாயக முன்னணி வேட்பாளர் ஒருவருக்கு வாக்களிக்கும் ஒரு வோட்டர் தமது கட்சி வோட்டைப் பிறிதொரு கட்சியான சமூக ஜனநாயகக் கட்சிக்கு அளிக்க முடியும். இந்த முறை ஜெர்மன் தேர்தல் சட்டம் அளித்திருக்கும் ஒரு புதுமையான உரிமையாகும். - வி. கோபாலன்





## அது யார்?

"ஒரு புத்திசாலியான வீரனைத்தான் நான் மணப்பேனென்று எத்தனை தடவை கூறுவது?"

"அன்று படகிலிருந்து விழுந்த உன்னைக் காப்பாற்றினேனே, அது வீரமில்லையா?"

"சரி, புத்திசாலித்தனம்?"

"படகைக் கவிழும்படி செய்ததே நான்தானே!"

- "தேஜ்"

## இருளும் ஒளியும்

இருட்டைக் கண்டு பயப்படும் குழந்தையை மிகச் சுலபமாக மன்னிக்கிறோம். உண்மையான துயரம் என்ன தெரியுமா? அநேக மனிதர்கள் வாழ்க்கையில் ஒளியைக் கண்டுதான் அஞ்சுகிறார்கள். - பிளேட்டோ

- அனுப்பியவர் தேஜ்

## தேர்ந்தெடுப்பது...



"செய்தித் தாள்களே இல்லாத அரசாங்கம் வேண்டுமா? அல்லது அரசாங்கம் ஏதும் இல்லாமல் செய்தித் தாள்கள் மட்டும் வேண்டுமா?' என்று என்னைக் கேட்டால் நான் இரண்டாவதைத் தேர்ந்தெடுப்பேன்."

- ஜெபர்ஸன்

இப்பிரிண்ட் - 'முத்து'



# இனமே இனத்தை இழந்தால்...

கோவி மணிசேகரன்

இருளின் ஆதிக்கம் எங்கும் எதிரொலிக்கத் தொடங்கியது. அதனைக் கட்டியம் கூறி வரவேற்பன போல எங்கோ ஓர் ஓநாய் குரல் கொடுத்தது. தொடர்ந்து குள்ளநரிகளின் ஊளைக் குரல்கள் மெல்ல எழுந்தன. ஓ.....

கழுதைப் புலி ஒன்றின் கனத்த சத்தம் காட்டையே பல கணங்கள் கலக்கியது. பிணம் தின்னும் இவற்றுக்கு இருள்தானே எழிலார்ந்த சொர்க்கம்?

இந்தப் பயங்கரமான கானகச் சூழ்நிலையில் இரண்டு மனித உள்ளங்கள் அகப்பட்டுக் கொண்டு தவியாய்த் தவிக்கலாயின! ஆம்; தமிழ் படித்து உடல் சுருங்கி — அந்தத் தமிழை ஆதரிக்கும் நல்ல சூழ்நிலை கொஞ்சம் கொஞ்சமாக நாட்டில் குறைந்து வந்த காரணத்தால், வாழ்வு சுருங்கிப் பிழைக்க வழி தேடிச் சென்ற கழறிப் புலவரும், அவருடைய அன்புக்குப் பாத்திரமான இனிய மனையாள் நாயகியும் தான்! தம்முடைய வறுமைக்கு இருபத்தை ஈடு கொடுத்து நிழலைப் போன்று துணை நின்ற மனையாளுக்கு 'நாயகி' என்ற நல்ல பெயரை — பொருத்தமான பெயரைக் கழறிப் புலவர் தான் சூட்டினார். உண்மையும் கூட. புலவனுக்கு வாழ்க்கைப்படுபவள் புண்ணியவதிதானே? பாவத்தின் திரளை மிதிப்பவள் என்று கருதுபவர்களும் உண்டு! தம்மைப் பற்றி உணராதவர்களுக்குப் புலமையின் செல்வத்தை 'முழம்' போட்டுப் பார்க்கத்தானா தெரியப் போகிறது.

"சுவாமி! இருள் நன்றாகவே சூழ்ந்து கொண்டது. எக்கச்சக்கமாக நாம் இந்தக் காட்டில் அகப்பட்டுக் கொண்டோம். எங்கேனும் பாதுகாப்புடன் கூடிய இடம் இருக்கிறதா என்று பாருங்கள்! தங்கிக் காலையில் பயணத்தை வைத்துக்கொள்வோம். எனக்கென்னவோ பயமாக இருக்கிறது!" — நாயகியின் நடுக்கச் சொற்கள் இவை.

கழறிப் புலவரின் கண்களிலே அலட்சிய நோக்கு.



இவை அந்த இருளில் நாயகியின் மருண்ட கண்களுக்கு எவ்வாறு புலனாக முடியும்?

புலவர் புகன்றார்: "நாயகி! இயற்கை நமக்குச் செய்து வரும் கோடானு கோடி நலன்களுள் இருளும் ஒன்று. இதனைக் கண்டு யாரும் பயப்படவே கூடாது. பயப்படும்படி செய்த மனிதர்களை என்னவென்று சொல்வது? ஏற்கனவே வறுமை எனும் மிகப் பயங்கரமான இருள் சூழப்பட்ட நாம், இந்த இருளைக் கண்டு பயப்படுவதா? நமக்கு ஏன் பாதுகாப்பு? மருதரசன் ஆட்சியில் பயம் என்ன வேண்டிக் கிடக்கிறது?"

"சுவாமி! தங்கள் சமாதானத்தை நான் மறுப்பதாக நினைக்க வேண்டாம். சற்றே ஓய்வு கண்டால் நலம் பயக்கும்."

"அப்படியா! இன்னும் கொஞ்ச தூரம் சென்றால் ஐயனாரப்பன் கோயில் இருக்கிறது. அக்கோயிலுக்குச் சென்று களைப்பாறலாம்!"

"என்ன! ஐயனாரப்பன் கோயிலா? ஐயோ! இரவில் அங்கு தங்கக்கூடாது என்பார்களே!"

"பேதைப் பெண்ணே! தெய்வங்கள் மனிதரைக் காக்கத்தான் நிறுவப்பட்டிருக்கின்றன; பயமுறுத்தவல்ல!"

சிறிது நேரச் சிந்தனைக்குப் பிறகு நாயகி ஒப்புக் கொண்டாள். இருவருமாகச் சேர்ந்து சற்றே தொலைவில் இருந்த ஐயனாரப்பன் கோயிலை அடைந்து ஓய்வு கண்டனர். கையிலிருந்த கட்டுச் சோற்று மூட்டையை அவிழ்த்து வயிற்றின் கொடுமையை அடக்கினார்கள்.

**பா**ண்டிய வரலாற்றில் கடைசிப் பொன்னேட்டைக் கம்பீரமாகவும் சில பல சமயங்களில் கோழையாகவும் முடித்த பெருமை மருது பாண்டியர்களைச் சாரும்.

நாட்டையும், மொழியையும், மக்களையும் எவ்வாறெல்லாம் உயர்த்த முடியும் என்பது பற்றிச் சிந்தித்துச் செயலாற்ற முனைந்த போதுதான் ஆங்கிலேயர்களின் குறுக்கீடு அதிகரிக்கத் தொடங்கியது. கும்பினிப் பட்டாளத்துக் கும்மாளத்துக்கு வரம்பில்லாமற் போய்விட்டது. அதற்குப் பல தமிழ்த் துரோகிகளும் துணை நின்று தூபம் போடலானார்கள். இப்பேர்ப்பட்டவர்கள் எந்தக் காலத்திலும் உண்டு. இவர்கள் இருக்கும் வரை நாட்டில் போராட்டங்களும் குழப்பங்களும் தலைதூக்கத்தானே செய்யும்?

கும்பினியர்களாலும் நவாப்புக்களாலும் குழப்பம் கண்டு வந்த மருது பாண்டியர்களுக்கு மேலும் ஒரு குழப்பம் குறுக்கிட்டது. அதுதான் கள்வர்களின் தலையெடுப்பு! பகைவர்கள் இப்படியாக ஆட்களை விலைக்கு வாங்கி நாட்டின் பல மூலைகளில் ஏவினர். அவர்கள் விளைவித்த தீங்குகளின் பட்டியல் நீண்டது. என்ன செய்வது? எப்படி அடக்குவது? இந்நிலையில் நாட்டின் நலம் எவ்வாறு உருப்பெறும்?

சிவகெங்கைச் சீமையில் எங்கோ ஒரு பகுதியில் ஒட்டிக் கொண்டிருக்கும் கமுதி என்னும் ஊரைச் சார்ந்த அந்தக் கமுதிப் புலவருக்கு நாட்டில் கொந்தளித்து வரும் அரசியல் புயல் பற்றி அறியக் காரணமே இல்லை. வறுமையிலும் கற்பனைச் சஞ்சாரம் செய்பவர்தானே அவர்? இல்லையென்றால், மருது பாண்டியர்களைத் தரிசிக்கலாம்; தரிசித்துப் பாடல் இயற்றலாம்; இயற்றிப் பரிசில் பெற



**நல்ல உபயோகம்!**

"அப்பா! நீங்கள் வாங்கிக் கொடுத்த 'டை' மாப்பிள்ளைக்கு ரொம்ப உபயோகமாக இருக்கு; தினம் அதைவேதான் உபயோகித்துக் கொண்டு வருகிறார்!"

— ஜரான்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

லாம்; பெற்று வறுமையை விரட்டலாம் என்ற நினைவுடன் மனைவியை அழைத்துக் கொண்டு காட்டு வழியென்றும் பாராமல் இருட்டில் பயணம் செய்யத் துணிந்திருப்பாரா?

ஐயனரப்பன் கோவில் வெளிப்புறத்தில் அமர்ந்து களைப்பாறிக் கொண்டிருக்கும் அவருடைய மனையாளுக்கு உறக்கம் தழுவியது. அப்போது இரவு நடுநிசி யாத்திரை செய்து கொண்டிருந்தது.

திடும் என்று கூச்சலிட்டுக் கண் விழித்த நாயகி சுற்றும் முற்றும் கவனித்தாள். வேறொன்றும் இல்லை. சாதாரணப் பெருச்சாளிதான்! மேலே விழுந்து அத்தனை கலக்குக் கலக்கிவிட்டது! அதற்கு மேல் தூக்கம் பிடிக்க வேண்டுமே! ஆனாலும் புலவர் மீண்டும் குறட்டை விடத் தொடங்கி விட்டார்.

மெல்ல ஒருக்களித்துப் படுத்துக் கொண்ட நாயகி, கண்களை எட்டிய தொலைவு வரை செலுத்திக் கவனித்துக் கொண்டிருந்தாள். கானகச் சூழ்நிலை வேறு இதயத்தை சரத்துணி போலப் பிழிந்து கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில்—

இருபதுக்குக் குறையாத ஒளிப் பொறிகள் தொலைவில் தென்பட்டன. கண்களைக் கசக்கிக் கொண்டு கூர்ந்து கவனித்தாள் நாயகி. சற்றைக்கெல்லாம் அப்பொறிகள் தீவர்த்திகளாக மாறின.

"சுவாமி! சுவாமி!"

நாயகி பதறியடித்துக் கொண்டு கணவரை எழுப்பினாள்.

"அடடா! தெரியாமல் உன்னை அழைத்துக்கொண்டு புறப்பட்டு விட்டேன்; பிராணன் போகிறது!" என்று அலுத்துக் கொண்டே எழுந்தார் கழுநிப் புலவர். "என்ன? என்ன நடந்து விட்டது?"

நாயகி ஏதும் பேசிக் கொள்ளவில்லை. சொற்கள் நெஞ்சக் குழியுள் புதைபட்டுப் போயின. கையை மட்டும் நீட்டிச் சுட்டிக் காட்டினாள்.

தங்களை நெருங்கி வரும் தீவர்த்திகளைக் கண்ட பிறகுதான் கழுநிப் புலவருக்கு ஒரு கணம் பேச்சு நின்று, மறுகணம் சுவாசம் கண்டது.

கழுநிப் புலவரும் அவருடைய நாயகியும் எழுந்து சென்று உடல் நடுக்கத்துடன் ஒரு மறைவில் நின்று கொண்டனர். தீவர்த்திகளை ஏந்தி வருபவர்கள் வேறு யாருமல்லர்; கள்வர்கள்தாம் என்ற முடிவு மனத்தில் எழ அதிக நேரம் பிடிக்கவில்லை. என்ன இது, மருது பூபாலன் ஆட்சியில் கள்வர்களா?— கழுநிப் புலவர் கதிகலங்கிப் போனார்.

தீவர்த்திகளை ஏந்தி வந்தவர்கள் நேரே ஐயனரப்பன் சிலையண்டை வந்து நின்று வணங்கினர். இது தினமும் ஏற்படுகிற நிகழ்ச்சிதான். அன்று பார்த்துக் கழுநிப் புலவரும், அவருடைய நாயகியும் அகப்பட்டுக் கொண்டார்கள். அவ்வளவே.

பயம் ஏற்படுகிறபோது எல்லாமே ஏற்படும் என்பார்கள். நாயகிக்கு அந்த நேரம் பார்த்துத்தானா தும்மல் வரவேண்டும்?

அ.....அச்க்!

தும்மிய மறுகணம்—

"ஏய், யார் அங்கே?"

ஆ...! எவ்வளவு பயங்கரமான குரல்; கள்வர் தலைவனுடைய தொண்டையிலிருந்து புறப்பட்ட குரல் அது!

புலவர் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வெளியே வந்தார்.

"ஐயா! நான் ஒரு புலவன். ஊர் கழுநி. அதோ நிற்பவள் என் மனையாள். வறுமை தானாத நாங்கள் மருதுபாண்டியனைக் கண்டு பாடிப் பரிசில் பெறலாம் என்று புறப்பட்டோம். வழியில் இருட்டிவிட்டதால் ஐயனரப்பன் கோவிலில் தங்க நேரிட்டது."

"ஓகோ!" என்று கூறிய கள்வர் தலைவன் இடியிடி எனப் பெருநகை புரிந்தான்.

"ஏய், புலவா! போயும் போயும் போக்கிடம் புரியாமல் தவிக்கும் அந்த மருதுப் பயல்களைக் கண்டு பாடவா புறப்பட்டாய்? அவன் என்ன கொடுப்பான்? கொடுப்பதற்குத்தான் அவனிடம் என்ன இருக்கிறது?"

"உள்ளவரை பெற்று உவகை யடைகிறேன்."

"ஓகோ! அப்படியா?"

"ஐயா! மருதரசர்கள் ஒன்றும் தராவிட்டாலும் மன நிறைவே! அவர்கள் இந்த நாட்டை எப்படியெல்லாம் கட்டிக் காத்தவர்கள். பண்டு தமிழ் வளர்த்த பாண்டிய மரபில் வந்தவர்களைப் பரிசில்களுக்காக இல்லாவிட்டாலும், அந்தப் பண்புக்காவது பாடலாம் அல்லவா?"

கள்வர் தலைவனுடைய கண்கள் கனலக ஆயத்தமாயின. அதனை அவன் எப்படியோ அடக்கிக் கொண்டான். கருங் கும்மென்ற அந்த இருட்டில் அவனுடைய கலக்கம் யாருக்குத் தெரியப் போகிறது? எல்லாம் வயிற்றுப் பிழைப்பு; பாதியில் வந்த பிழைப்பு!

இதற்குள் எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி நடந்து விட்டது. நாயகி குரல்வளையைப் பிடித்தது போன்று கானகமே அதிரக் 'கோ' வென்று அலறிவிட்டாள். கழுநிப் புலவர்



அரண்டு மிரண்டு திரும்பி நோக்கினர். ஒரு கள்வர், தனித்து ஒரு மூலையில் நின்றிருந்த நாயகியைச் சோதனை போட்டான். பொன், பொருள் ஒன்றையும் காணுமை கண்டு, ஆத்திரம் தாளாமல் கழுத்தில் தொங்கிக் கொண்டிருந்த தாலியைக் கட்டோடு இழுத்து அறுத்து எடுத்துக் கொண்டான். உயிரே போனதுபோல் நாயகி கத்தி விட்டாள் என்றால், ஏன் கத்த மாட்டாள்?

அருகே சென்று விசாரித்து அறிந்த கள்வர் தலைவன் மனம் பதறிப் போனுன். நியாயம் பேச முடியுமா? நியாயம் பேசினுல் கள்வர் தலைவனுக இருக்க முடியுமா? 'பதவி' என்பதற்குப் பல சமயங்களில் 'மௌனம்' தான் சரியான பொருள் என்பதை உணர்ந்து கொண்ட அனுபவசாலி போலும் அவன்!

தாலியைக் கையில் பெற்றுக் கொண்ட கள்வர் தலைவன், பறித்தவனைக் கூர்ந்து கவனித்தான். பறித்தவன் வெற்றி நகை காட்டினுன். நாயகியை நோக்கினுன். உலகத்தையே பறி கொடுத்தவள் போல் குமுறிக் குமுறி அழுதாள் அவள்.

கள்வர் தலைவன் கடகடவென்று நகைத்தான். அடுத்து—

அனைவரும் நிலர்த்திகளை ஏந்திக் கொண்டு சிட்டாய்ப் பறந்தனர். காவியம் பிறப்பதற்கு மாருகக் கமுதிப் புலவரின் கண்களில் நீர் கரை புரண்டது.

அரண்மனையை அடைந்த கமுதிப் புலவரும், அவருடைய நாயகியும் கண்ணீரும் கம்பலையுமாகக் காணப்பட்டனர். வாயிற் காவலனிடம் என்ன சொல்லி அனுப்புவது என்றே புரியவில்லை அவருக்கு. ஆனுல் நாயகிக்குப் புரிந்து விட்டது. ஒரு சமயம் இப்படியான ஒரு பாண்டிய அரண்மனை வாயிலில் கண்ணகி என்பாள் கணவனையே இழந்து வந்து நின்ற காட்சி நினைவுக்கு வந்தது. அவள் சொன்னுள்: "வாயிலோயே! தாலியை இழந்த சுமங்கலிப் பெண், தன் கணவருடன் மன்னரைக் காண வந்திருப்பதாக உன் மருதரசரிடம் சென்று தெரிவி!"

வாயிற் காவோனுக்கு ஒன்றுமே புரியவில்லை. புரிந்துகொள்ளக் கூடிய சொற்களா அவை? அவன் நேரே அரண்மனையுள் சென்றுன். கமுதிப் புலவர் கலங்கிற நெஞ்சத்துடன் நின்று கொண்டிருந்தார். கவி பாடிப் பரிசில் கேட்க வந்த இடத்தில் குறை கூறி நியாயம் கேட்க வந்த நிலை ஏற்பட்டதைக் கண்டு விதியை நொந்து கொண்டார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் காவலாளி வெளியே வந்து இருவரையும் அழைத்துச் சென்றுன்.

மன்னர் மருது பாண்டியர் — பெரிய மருது மனம் பதற்றம் கண்டு இருவரையும் கரம் கூப்பி வரவேற்றுர். வாயிற்காவோன் கூறிய, 'தாலியை இழந்த சுமங்கலிப் பெண்' என்ற சொற்கள் மூளையைக் குழப்பிக் கொண்டிருந்தன.

"நீங்கள் யாரோ? என்ன காரணம் பற்றி .." மன்னர் முடிக்கவில்லை. புலவர் குறுக்கிட்டார்:

"மருதரசே! தமிழ் வளர்த்த பாண்டிய மண்ணில் கணவன் இருக்க, மனைவி தாலியை இழப்பதுண்டா?"

பெரிய மருது பெரிதாக மனம் பதறினுர்.

"அபசாரம், அபசாரம்!"

புலவர் நிலையை வெறும் சொற்களால் வடிக்காமல் பாட்டாகப் பாடினுர்.

*** மருவிருக்கும் கூந்தல் மனையாள் கணவன்**
**அருகிருக்கத் தாலி அறுமா? - இரவுனக்குச்**
**செங்கோல் இலையாகித் தேசமெங்கும்**
**கள்வர்க்குப்**
**பங்கோ மருது பூபா!"**

வெண்பாவைக் கேட்ட மருது பாண்டியர், கண் பார்வை மயங்க, கருத்து அலைமோதத் தன்பால் நாடிவந்த தரும சங்கடத்தை எண்ணி வேதனைப் பட்டார்.

"தமிழ் அன்னையே! தவறு நடந்துவிட்டதா? ஐயகோ! பாண்டிய மண்டலம் பாவ மண்டலமாகிவிட்டது. என் செய்வேன்? ஏது செய்வேன்? பெரியீர்! தாங்கள் யாரோ?"

"மன்னு, நான் கமுதிப் புலவன்."

"என்ன, கவிதைக்கு ஒரு கமுதி என்று கண்டோர் போகும் கவிச் சக்கரவர்த்தியா? பெருந்தகையீர்! தங்களுக்குப் பெருந் தவறு இழைத்து விட்டது இந்தப் பாண்டிய நாடு. அநீதி! அநீதி! மருதரசன் காப்பான் என்று புறப்பட்ட தங்களுக்கு இக்கதி ஏற்பட்டிருக்கக் கூடாது. சொல்லுங்கள். எத்தனை பவுனில் வேண்டுமானுலும் இந்தக் கணமே தாலி செய்து தருகிறேன்."

"அது என் மனையாளின் கழுத்தைக் காக்கும். ஆனுலும் அன்று நான் தொட்டுக் கட்டிய தாலியாகி விட முடியுமா?"

"போதும், புலவரே, போதும். என்னை உயிரோடு சித்திரவதை செய்யக்கூடிய பிரச்னை இது!"—என்று கண் கலங்கிக் கூறிய மருதரசர், "அமைச்சரே!" என்றழைத்தார். அது வரை செவிமடுத்துக் கொண்டிருந்த

---

* இப்பாடல் ஒன்றே இக்கதைக்கு ஆதாரம்.

அமைச்சர் தாண்டவராய முதலியார், கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்தார்.

''அமைச்சரே! உடனே பறையறைவியுங்கள். நாளைப் பொழுது விடிவதற்குள் புலவர் பெருமானின் தாலி அரண்மனைக்கு வந்து சேர வேண்டும். அதற்கு ஈடாக நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட இந்த நாட்டுப் பட்டத்தரசி ராக்காத்தாளின் தாலி கொடுக்கப்படும் என்ற செய்தியையும் சேர்த்துப் பறையறைவியுங்கள்!''

''மன்னா!'' — தாண்டவராய முதலியார் மட்டுந்தானா இப்படி அலறினார்? கழறிப் புலவரும் கதிகலங்கிக் கதறிப்போனார்.

''சொன்னதைச் செய்து முடியுங்கள். மக்களின் தாலி பறி போகும் நிலை பாண்டிய நாட்டுக்கு வந்த பிறகு பட்டத்தரசிக்குத் தாலி ஒரு கேடா? துணிவாகவே பறை சாற்றுங்கள், அமைச்சரே! மனம் இரங்கிக் கொண்டு வரும் திருடனுக்கு எந்த விதமான தண்டனையும் கிடையாது என்றும் உறுதி கூறிப் பறைசாற்றச் சொல்லுங்கள்.''

மருது பாண்டியரின் சினம் கணத்துக்குக் கணம் அதிகரித்துக் கொண்டே இருந்தது.

ஆணைப்படி பறையொலி சிவகங்கைச் சீமை மூலை முடுக்குகளிலெல்லாம் ஒலிக்கத் தொடங்கியது. செய்தியறிந்த மக்கள் சிலையாயினர். நாட்டின் பண்புக்கு இத்துணை பாதகமேற் பட்டுவிட்டதா?

பொழுது பலபலவென்று விடிந்தது.

அரண்மனை வெளியில் இருந்த கற்றூண் மண்டபத்தில் மருது பாண்டியர்கள் அமர்ந்து காணப்பட்டனர். சற்றுத் தொலைவில் ராணி ராக்காத்தாள் அமர்ந்து காணப்பட்டாள். மக்கள் கூடி விட்டனர். நேரம் வளர்ந்து கொண்டே யிருந்தது. தாலியைத் திருடிய கள்வனைக் காணோம்.

விருட்டென்று கம்பீரமாக எழுந்தார் பெரிய மருது. கழறிப் புலவரை நோக்கினார்: ''புலவர் பெருமானே! இந்த நாட்டில் பெண்களின் தாலியைத் திருடும் அளவுக்குப் பண்பு கெட்டு விட்டது. பட்டத்தரசியின் தாலியை அறுத்து இந்தக் கேவலமான மண்ணில் வீசி எறிகிறேன்.''

இப்படி மருது பாண்டியர் கூறி முடித்த மறு கணம்—

''மன்னா! மன்னா!'' என்று அலறியவண்ணம் ஓடோடி வந்தான் அந்தக் கள்வர் தலைவன். நெட்டாங்கமாகத் தரையில் வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று, ''மன்னா! நாட்டின் குழப்பத்துக்கு வறுமைக்குப் பலியாகித் திருடப் புகுந்த எங்களுள், அந்நிய தேசத்தவன் ஒருவன். அவன் தாலியின் பெருமையை உணராதவன்; தமிழ்ப் புலவனின் அருமை அறியாதவன். தகாத இச் செயலைச் செய்துவிட்டான். அவனைக் கண்டிக்க முடியாத அளவுக்கு என் பதவி வேறு குறுக்கிட்டு விட்டது. எனக்கு மேல் ஒரு தலைவன் இருக்கிறான். அவனுடைய கைக்கூலிகள் நாங்கள். ஆயினும் தாலியை நான் பத்திரப்படுத்தி வைத்திருந்தேன். பறையொலி கேட்டுப் பதறிப் போய் ஓடோடி வந்தேன். தெய்வத்துக்குச் சமானமான பட்டத்தரசியின் தாலியைக் கழற்ற வேண்டாம். இதோ அந்தத் தாலி...'' என்று கள்வர் தலைவன் சொல்லிக் கொண்டே அருகில் வந்தபோது—

டுமீல்—

குண்டு பாய்ந்து கதறித் தரையில் துள்ளி விழுந்தான். அடுத்து மக்களில் சிலர், வேகமாக ஓடிக் கொண்டிருந்த கும்பினிக்காரக் கைக்கூலி ஒருவனின் குதிரையைப் பின் பற்றிச் செல்லலாயினர்.

கள்வர் தலைவனை மன்னித்து அவனை அணைத்துக் கொண்ட மருதரசர், ''கள்ளத்தனத்திலும் இந்த நாட்டில் ஒரு பண்பு இருக்கிறது; தியாகம் இருக்கிறது!'' என்று கூறிக் கூறிக் குழந்தை போலக் குமுறி அழலானார்.

கழறிப் புலவரோ, ''தன் இனத்தவனைத் தன் இனத்தவனே சுட்டுக் கொன்றுவிட்டான். அடுத்தவன் கைக்கூலிக்கு ஆசைப்பட்டு விட்டான். இனமே இனத்தை இழக்குமானால், எதிர் காலத்தில் நாட்டின் நிலை என்னவோ?'' என்று தம்முள் கலக்கத்துடன் முனகிக் கொண்டார்.

நாளைய நிலை எப்படியோ?

யார் மனத்தில்தான் இந்தக் கேள்விக் குறி எழவில்லை?

## 'பெயில்' கிளாஸ்!



''உம்ம பையன் 'பஸ்ட்' கிளாஸில் பாஸ் செய்து விட்டானாமே பேஷ்! பெண் சமாசாரம் என்ன?''

''அவள் 'பஸ்ட்' கிளாஸிலே பெயிலாகி விட்டாள்!''

''என்ன? பாஸ் செய்தாத்தான் பஸ்ட் கிளாஸ், செகண்ட் கிளாஸ் என்று சொல்லுவா... பெயிலுக்குக்கூடக் கிளாஸ் உண்டா?''

''இந்த வருஷம் என் பெண் முதல் வகுப்பிலிருந்து இரண்டாம் வகுப்புக்குப் போகணும். போகவில்லை. அதனால்தான் பஸ்ட் கிளாஸில் பெயிலாகி விட்டாள் என்று சொன்னேன்!''

— சுதாகரன்.

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

**ஜீவாம்ருதகம்**

ஆரோக்யத்திற்கும், பலத்திற்கும்

**அருணா**

மாதர்களின் ஆரோக்யத்திற்கு

**பாலப்ராஸ**

குழந்தைகள் டானிக்

**ரக்தசோதகா**

சிறந்த ரத்தசுத்தி ஔஷதம்

**ச்யவனப்ராசனம்**

இருமலுக்கு

**ஆயுர்வேதாஸ்ரமம்**

பிரைவேட் லிமிடெட்

110 [illegible] ரோட், சென்னை-1

---

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

## ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

---

நீங்கள் நாள் முழுவதும்
சுறுசுறுப்புடன் இருப்பதற்கு
உபயோகப்படுவது

# நோவா

## டால்கம் பவுடர்

NOVA
Talcum Powder

தயாரிப்பாளர்கள் :

**தி நோவா கம்பெனி**

ஆக்ரா ரோடு, பாண்டுப்
பம்பாய் - 78




## காந்தி தரிசனம்

பனித் துளி சின்னஞ் சிறியதுதான். அதனுலென்ன? சூரியனின் முழு உருவமும் அதனுள் அடங்கி விடவில்லையா? காந்தி மகான் எவ்வளவோ மகா புருஷர். அதனுலென்ன?— கோவை அய்யாமுத்து என்ற கதர்த் தொண்டர் மூலம் அவரது மகத்தான தேஜோமய உள்ளத்தைக் காணவே செய்கிறோம்.

கோவை அய்யாமுத்து அவர்கள் தமிழ் நாட்டில் கதர் பரப்ப, ஏழைக் கைத்தறி நெசவுத் தொழிலாளிகளுக்கு வாழ்வளிக்க மிகச் சீரிய சேவை புரிந்தார். அவர் தமிழ் நாட்டில் கதர் இயக்கத்துக்குத் தலைமைப்பீடமாக விளங்கிய திருப்பூர் சர்க்கா சங்கத்தில் செயலாளராகச் சேர்ந்து, நஷ்டத்தில் நடந்து கொண்டிருந்ததை அபரிமிதமான லாபத்துடன் நடக்கி நிர்வகித்தவர். அவர் கதர்த் தொண்டுடன் கூடவே காங்கிரஸ் மகா சபைகளிலும் போராட்டங்களிலும் பங்குகொண்டு நாட்டுக்குச் சேவை செய்தவர். தமிழகத்தில் கதர் பரப்புவதில் முக்கிய ஊழியராகப் பணியாற்றியமையால் காந்தி மகானுடன் நெருங்கிப் பழகவும் மனம் விட்டுப் பேசவும் பல சந்தர்ப்பங்கள் கிடைத்துள்ளன. அவரது அன்பையும் பரிவையும் அய்யாமுத்து அபரிமிதமாகப் பெற்றிருந்தார். இவற்றையெல்லாம் தொகுத்து 'காந்தி தரிசனம்' என்ற சிறு நூலாகத் தந்திருக்கிருர். பனித் துளிபோல் அழகாகவும் சிறிதாகவும் இருக்கிறது. அதனுள் காந்தியின் ஒளியும் நிறைந்திருக்கிறது.

இந்த நூலிலிருந்து அய்யாமுத்து ராஜாஜியின் அன்பையும் மதிப்பையும் எவ்வளவு தூரம் பெற்றிருக்கிருர் என்பதும் தெரிகிறது.

காந்தி நூற்றுண்டை யொட்டி வெளிவந்த காந்தியைப் பற்றிய பல நூல்களுள் இது ஓர் அரிய நூல் என்பதில் ஐயமில்லை.

பிரசுரம்: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை 1; விலை: ரு. 3-50.

## மணக்கோலம்

சீதா, ஜானு, கமலா, அகிலா — இப்படி நான்கு பாவையர்; சந்தானம், ரவி, ராஜா இப்படி மூன்று காளைகள். இவர்களை வைத்துக் கொண்டு வனப்புமிக்கதொரு வாழ்க்கைச் சித்திரத்தை வரைந்திருக்கிருர் பிரபல நாவலாசிரியர் பி. வி. ஆர். மாறுபட்ட குணங்கள், கொள்கைகள், லட்சியங்கள், ஆசாபாசங்கள் கொண்ட இந்த ஏழு பாத்திரங்களை ஒருவரோடொருவர் விளையாடவிட்டு, நல்லதொரு நாவலை உருவாக்கி வெற்றி பெற்றிருக்கிருர் ஆசிரியர். 'கல்கி' வெள்ளி விழா நாவல் போட்டியிலும் தான்! மூன்றுவது பரிசையும் வாசகர்களிடையே அமோகமான பாராட்டுதலையும் பெற்ற நாவல் மணக்கோலம். துணிச்சல் மிக்க ஜானுவின் பாத்திரத்தை வாசகர்கள் யாராலும் மறந்துவிட முடியாது. தன் காதலன் நேர்மையற்றவன் என்று தெரிந்தும் எத்தனையோ எதிர்ப்புகளுக்கிடையிலும் அவனையே தன் கணவனாக்கிக் கொள்ளும் ஜானு புதுமைப் பெண். நேர்மையின் மறு உருவான சந்தானத்தின் பாத்திரம் மணக்கோலத்தின் ஜீவநாடி. பழகு தமிழின் அழகு நடையில், வேகமும், விறுவிறுப்பும் கொண்ட உரையாடலில், சம்பவங்களின் கட்டுக்கோப்பில் மணக்கோலம் சிறந்த நாவல்களின் வரிசையில் இடம் பெற்று விடுகிறது. இந் நாவலைப் படிக்கக் கையிலெடுப்பவர் அதை முடித்த பிறகுதான் மூடி வைப்பார்கள். அச்சும் அமைப்பும் புத்தகத்துக்கு மேலும் அழகூட்டுகின்றன.

மணக்கோலம் — ஆசிரியர்: பி. வி. ஆர்.

வெளியிடுவோர்: வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை—17. விலை ரு. 7—50

## The Flute Calls Still

பஞ்சாபில் செல்வச் செழிப்புள்ள குடும்பத்தில் பிறந்த ஸ்ரீமதி இந்திராதேவி தெய்வத்தின் துணை பெற்று திலீப் குமார் ராய் அவர்களின் சிஷ்யை ஆனதும், அவருடன் சேர்ந்து பூனுவில் ஹரிகிருஷ்ண மந்திரத்தை நிறுவி வளர்த்து வருவதும் ஓர் அதிசயம்.

இதனினும் பெரிய அதிசயம் ஸ்ரீமதி இந்திராதேவிக்குக் கண்ணனும், மீராபாயும் சாதிக்கும் திவ்விய தரிசனங்கள். கண்ணனின் குழலிசை கேட்டு பாவ சமாதியில் அமிழ்ந்து விடும் பாக்கியம் பெற்ற இந்திராதேவி, மீராபாயின் வாழ்க்கையைக் கண்ணுக்கு முன் கண்டு, இது வரை உலகுஅறிந்திராத மீராவின் பாடல்களையும் மீராவின் வாய்மொழியாகவே கேட்டுப் பாருக்கு வெளிப்படுத்தி வருகிருர். இந்திராதேவியின் அநுபவங்கள் பரம சத்தியமானவை என்று அரவிந்த முனிவரே கூறியபின் நம்மில் யாரும் புருவத்தை நெரிக்க வேண்டியதில்லை.

அன்பர்களால் 'தாதா' என்றும் 'திதி' என்றும் அழைக்கப்படும் டி. கே. ராயும், இந்திராதேவியும் எழுதியுள்ள கடிதங்களும் ஹரிகிருஷ்ண மந்திரம் குறித்த விவரங்களும் அடங்கிய இந்த நூல், அருளுக்குத் தாகம் எடுத்த நெஞ்சங்களையெல்லாம் நன்கு நனைக்கும். திவ்விய அநுபூதிபெற்ற இந்திராதேவிக்கு அதை அழகுபட எடுத்துரைக்கும் வாக்கு வன்மையையும் இறைவன் அளித்திருப்பது நமது அதிருஷ்டம். '(கண்ணன்) குழல் இன்னும் அழைக்கிறது' என்ற தலைப்பிலிருந்து தொடங்கி நூல் முடிவுவரை புனிதமும், அற்புதமும், அந்த அற்புதத்தை வெல்லும் எளிமையும் நிறைந்த சாந்த உலகில், ஆனந்த உலகில் சஞ்சரிக்கிறோம்.

Available at Hari Krishna Mandir, Poona-11. Price Rs. 6-50

# பிரார்த்தனை

## கோமகள்

"மீனு! கிளம்பி விட்டாயா?" என்று குரல் கொடுத்தவாறே உள்ளே வந்தான் ரவீந்திரன்.

"பாருங்களேன்! இத்தனை நேரமும் தெருவில்தான் நின்றேன், உங்களை எதிர்பார்த்துக் கொண்டு. குழந்தை கத்தினான். இப்போது தான் உள்ளே வந்தேன். நீங்கள் வந்துவிட்டீர்கள்!"

"அலங்காரம் பிரமாதமாய் இருக்கிறதே. இந்தா, பூ வைத்துக் கொண்டு கிளம்பு" என்று நாற்காலியில் சரிந்து உட்கார்ந்த ரவீந்திரன் மனைவியை விழுங்கி விடுவது போல் பார்த்தான்.

அவளின் புன்னகை அழகே தனிதான். உயர்ந்த உருவம், சிவந்த மேனி, சாமந்திப் பூவாகக் கண்கள். மிகச் சாதாரண நூல் புடவையிலும் இத்தனை அழகா? அவனுக்கு அவளைப் பார்க்கும்போதெல்லாம் ஒரு பெருமிதம் ஓங்கவே செய்கிறது.

"புறப்படலாமில்லையா?" என்று கைக் குழந்தையான பாலாவைத் தூக்கிக்கொண்டு நின்றாள் மீனு.

பெரியவள் விஜயாவைத் தூக்கிக்கொண்டான் ரவீந்திரன்.

"நீண்ட நாட்களுக்கப்புறம் இன்றுதான் வெளியே புறப்படுகிறோம் மீனு. சின்னவள் பிறந்ததிலிருந்து நீ வீட்டுப் பறவையாகி விட்டாயே..." என்றான் ரவீந்திரன்.

"அப்பப்பா! இரண்டு குழந்தைகளை வைத்துக் கொண்டு வெளியில் கிளம்புவதானால் ஒவ்வொன்றையும் தயார் செய்வதற்குள் போதும்!" என்று அலுத்துக்கொண்டாள் மீனு.

"இது என்ன அலுப்பு? உன்னைப் பார்த்தால் ஒரு கிராஜுவேட் மாதிரியே இல்லை, மீனு!" என்று சீண்டினான் அவன்.

"எல்லாக் கிராஜுவேட்டும் ஒரு தாயானால் இப்படித்தான் இருப்பார்கள்!"

"அதற்காகக் கணவனோடு உல்லாசமாகப் பொழுதுபோக்க அலுத்துக் கொள்வார்களா...?"

"அதுதான் கிளம்பி விட்டேனே!"

அவர்கள் தியேட்டருக்குள் நுழைந்த போது கடந்தகால வாழ்க்கையின் ஞாபகச் சுவடுகள் இருவரையும் பின்னிப் பிணைத்தன. அவர்கள் அன்பின் சங்கமத்தை ஏற்க விரும்பாத பெற்றோர்களை இருவருமே துறந்து வந்து தூர நின்றனர். முடிவுறாத, முடிவற்ற நட்பில் நிழல்களாகத் தொடரும் மனிதப் பரம்பரையில் அவர்களும் வழி நடந்தார்கள். யாருடைய முடிவோடும் அது முடிவதில்லை. யாருடைய தொடக்கத்தையும் அது தடுப்பதில்லை. இருளைப் பின்னணியாகக் கொண்ட தங்கள் அன்புத் தீபத்தை நெஞ்சுரத்தால் போற்றிப் பாதுகாத்துக் கொண்டார்கள். என்றாலும் வாழ்க்கையில் ஓர் அனாதைத் தன்மை ஊடுருவிக் கிடந்தது.

உதவிக்கோ, ஆதரவுக்கோ மீனு எங்கும் போனதெல்லாம் அவனுக்கு ரவீந்திரனைத் தவிர வேறு ஆதரிசமான உறவு யார் இருந்தார்கள்? 'உன்னைக் கைப்பிடித்தவன் நான் இருக்க நீ வாடுவானேன், துயரப்படுவானேன்?' என்று ஒவ்வொன்றையும் அவளுக்குப் பார்த்துப் பார்த்துச் செய்யும் கணவன், அந்த நேரத்திலெல்லாம் அவளுக்குத் தாயாக அல்லவா இருந்தான்?

இருவருமாகத் தியேட்டரின் மாடிப் படியில் ஏற ஆரம்பித்தனர். நாலைந்து படிகள் ஏறும்போதே பின்தங்கி விட்டான் ரவீந்திரன். ஏழெட்டுப் படிகள் முன்னேறிவிட்ட மீனு தன்னருகே தொடர்ந்த கணவனைக் காணாமல் நின்று திரும்பினாள்.

கீழே ரவீந்திரன் மூச்சு வாங்க நின்றான். தூக்கிக் கொண்டிருந்த விஜயாவைக் கீழே இறக்கிவிட்டுத் தன்னை ஏதோ ஒரு வேதனையிலிருந்து சமனப்படுத்திக் கொள்வது போல் நிதானமாக மேலும் ஒரு படி ஏற முயற்சி செய்தான். இட்ட அடியை மேலெழுப்பித் தூக்க முடியாத தவிப்பில் அவன் அப்படியே உட்கார்ந்து விட்டான்.

மீனு தடதடவென்று இறங்கி வந்தாள்.

"என்ன செய்யறது? ஏன் உட்கார்ந்துட்டீங்க?" என்று பதறினாள்.

"ஒன்றுமில்லை மீனு! ஏறவே முடியவில்லை! ரொம்பக் கடினப் பிரயாசையோடு ஏறப் பார்க்கிறேன், அப்போதும் ஏறமுடியவில்லை."

"ஐயோ! என்ன செய்கிறது உடம்பை? வாங்க, போகலாம்... யாராவது டாக்டரிட்டே காட்டலாம்...."

"கொஞ்சம் இரு, மீனு! வாங்கின டிக்கெட் வீணாகிறதா? ரொம்ப நாட்கள் கழிச்சுச் சினிமாவுக்கு வந்திருக்கிறோம். விஜயாவை நீ பிடிச்சுக்கோ, நான் படியேறி வரப் பார்க்கிறேன்" என்றவன் மேலும் படிகளில் ஏற

முயற்சி செய்தான். இரண்டு படிகள்தான் ஏற முடிந்தது. மேலும் தெரிந்த அத்தனை படிகளும் பூதாகாரமான மலைப் படிகளாகத் தெரிந்தன. எனவே அவன் மறுபடியும் உட்கார்ந்து விட்டான்.

மீனு தவித்துப் போனாள். "வாங்களேன், திரும்பலாம். சினிமாவும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்" என்று நொந்தவாறு அவனைக் கைத்தாங்கலாகப் பற்றிக் கீழே அழைத்து வந்தாள். அவன் முகத்தில் துளிர்த்திருந்த உற்சாகமெல்லாம் வடிந்து வேதனை குடித்து விட்டிருப்பதைக் கண்டு அவள் மனமெல்லாம் நடுங்கி மெய் சோர்ந்து விட்டது.

டாக்ஸியில் டாக்டர் வீட்டுக்கு வரும்போது மீனு கும்பிடாத தெய்வம் இல்லை. முணு முணுக்காத தெய்வ நாமமில்லை. டாக்டரின் பரிசோதனைப் படுக்கையில் அவன் படுத்த போது வெளியே வந்து உட்கார்ந்தாள். சற்று நேரத்தில் மருந்துச் சீட்டுடன் அவள் அருகே வந்தான் ரவீந்திரன்.

"டாக்டர் என்ன சொன்னார்?"

"ஒன்றும் சொல்லவில்லை. மருந்து எழுதிக் கொடுத்திருக்கிறார். 'வெயிட்'டைக் குறைக்கச் சொல்லியிருக்கிறார்."

"வேறொன்றும் இல்லையே...!" அவள் தனக்குள் தான் வரம் வேண்டி நின்ற தெய்வங்களுக்கெல்லாம் நன்றி செலுத்தினாள். அவள் முகத்தில் கருணையில் அவன் மேனி சிலிர்க்கிறது. குரலில் என்ன மிருது, என்ன நம்பிக்கை, என்ன உறுதி!

சிறிது சிறிதாகத் தன் கணவனின் போக்கில் ஒரு மாறுதலை உணர்ந்தாள் மீனு. சாப்



பாட்டில் ருசி அறிந்து சாப்பிடும் ரசனை, உடுத்துவதில் தேர்ச்சி பெற்ற நேர்த்தி, அவளிடம், குழந்தைகளிடம் பழகுவதில் அளவுக்கு அதிகமான பரிவு, கட்டுப்பாடு எல்லாம் சற்றே மங்கினாற்போல் ஒரு நிறத் தோற்றம் காட்டியது. இனிமையாக ஓடிய நான்காண்டு வாழ்க்கைக்கு ஒரு கசப்பான 'கமா' விழுந்து அந்த வாழ்வின் சுருதி சுத்தத்தில் ஓர் உருப் புரியாத அபசுரம் இறங்கினாற்போல் இருந்தது. ஏதோ ஒரு மெல்லிய திரை இருவரிடையே ஊடாடுவது போன்ற சஞ்சலம் ஏற்பட்டது. அவன் செயல்களில் ஒரு நுண்ணிய திட்ட வட்டம் இருந்தது. ஏதோ ஓர் ஒழுக்கம் இருந்தது.

அவனது அமைதியின்மையில் அவள் பங்கு பெற விரும்பினாள். ஆனால் அவன் சேர்த்துக் கொள்வதாக இல்லையே... இப்படிச் சம்பாதிப்பது, சாப்பிடுவது என்றிருக்க விவாக பந்தம் வெறும் யந்திரத் தத்துவமில்லையே...

வெகு நேரம் தூக்கமில்லாமல் புரண்டு கொண்டிருந்து விட்டு அப்போதுதான் தூங்கினாள் மீரா. சற்று நேரத்திலேயே விழிப்புத் தட்டியது. மெல்லிய இருளூடே ரவீந்திரனை அருகே காணவில்லை. மீரா எழுந்து உட்கார்ந்தாள். சுற்றிலும் பார்த்தபோது ஜன்னலருகே ரவீந்திரன் நிற்பது தெரிந்தது. அவள் எழுந்து விளக்கைப் போட்டாள்.

"என் தூங்காமல் இங்கே நிற்கிறீங்க?" என்று வார்த்தையை முடிக்குமுன்பே அவள் பீதியோடு நின்றுவிட்டாள்.

முகம் வெளுக்க, கண்கள் கலங்க நின்றிருந்த ரவீந்திரன் அவளைக் கண்டதும் வேதனையுடன் அவள் கைகளைப் பற்றிக் கொண்டான். "எனக்கு மூச்சு விடச் சிரமமாக இருக்கிறது, மீரா!"

"ஐயோ!" என்று நடுங்கினாள் அவள்.

"ஏதோ ஒரு கெட்ட கனவு. அப்போது விழிப்பு வந்து விட்டது. உடனே மூச்சு முட்டுகிறது. காற்றே போதவில்லை எனக்கு. அதனால்தான் இங்கு வந்து நிற்கிறேன்."

"என்ன பண்ணலாம்? இப்போது தேவலையா? நான் போய் டாக்டரை அழைத்து வரட்டுமா?"

"நீ தனியாகப் போக வேண்டாம். கொஞ்சம் தேவலை எனக்கு. காலையில் பார்த்துக் கொள்ளலாம்."

"நீங்கள் வந்து உட்காருங்கள்! நிற்க வேண்டாம்!"

கட்டிலில் உட்கார்ந்தவன், மீராவின் மடியின்மீது தன் தலையைச் சாய்த்துக் கொண்டான். அவள் மனத்தில் உருப் புரியாத கலவரம் படர்ந்தது.

"என்ன, என்னவோ போல் இருக்கிறீர்களே, கொஞ்ச நாட்களாக... என்கிட்டே சொல்லக் கூடாதா?"

"ஒன்றுமில்லை மீரா..., ஒன்றுமில்லை..... என்னென்னவோ கோழைத் தனமான நினைவுகள்..."

இந்தத் தடவை அவன் கூறியதை அவள் நம்பிவிடவில்லை. ஒன்றுமில்லை என்று அவன் சொல்வதே ஒன்று ஏதோ உண்டு என்று உணர்த்துவது போலிருந்தது. ஆனால் மேலும் துருவிக் கேட்காமல் அவனுக்குத் தைரியம் மூட்டுவது போல் அணைத்துக் கொண்டாள்.

"மீரா!...."

"என்ன?"

"ஒன்று சொல்வேன்; கேட்பாயா?"

"இது என்ன கேள்வி? நீங்கள் சொல்லி நான் கேட்காமல் இருப்பேனா?"

அவன் தயங்கியவாறே கூறினான்: "நீ வேலைக்குப் போகிறாயா? உன் படிப்பும் உபயோகப்படட்டுமே..."

"அதற்கு என்ன அவசியம்? திடீரென்று இந்த முடிவு ஏன்? கைக்குழந்தையை விட்டு விட்டு எப்படி....?"

"பார்த்தியா? நான் எது சொன்னாலும் கேட்டு விடுவேன் என்றாயே...?" ரவீந்திரன் எழுந்து கொண்டான்.

"குழந்தைகளை வளர்ப்பதை விடவா, வேலைக்குப் போவது முக்கியம்? அதனால் சொன்னேன்."

"இருவர் சம்பாத்தியத்தில் வாழ்க்கைத் தரம் உயரும். அப்புறம் உன் இஷ்டம்!" இப்படிச் சொல்லிவிட்டு எழுந்து ஜன்னல் ஓரம் சென்றான்.

"இதுதான் உங்கள் வேதனையா?"

"ஒரு விதத்தில்!"

"வாழ்க்கையைக் கண்டு அத்தனை பயமா உங்களுக்கு?"

"ஆமாம்!"

"அப்படியானால் நான் வேலைக்குப் போகிறேன். குழந்தைகளை யாரிடம் விடுவது?"

"நல்ல ஆயாவாகப் பார்த்துவிடலாம்!"

"உங்கள் இஷ்டம்!"

"பேங்க் ஒன்றில் ஒரு வேலை காலி இருக்கிறது. அதை எப்படியும் உனக்குக் கிடைக்கும்படி செய்து விடுகிறேன்..."

"உம்!"

"வருத்தப்படுகிறாயா மீரா?"

"இல்லையே!"

"நீ படுத்துக் கொள். சற்று நேரம் காற்றோட நின்றுவிட்டு வருகிறேன்."

"மறுபடியும் அப்படி இருக்கிறதா?"

"இல்லை. இப்போது ரொம்பவும் தேவலை."

மீரா வேலைக்குப் போக ஆரம்பித்துவிட்டாள். குழந்தைகளை ஆயாவிடம் விட்டு விட்டுப் போவது இருக்கட்டும். அவளால் எப்படி அவர்களைப் பிரிந்திருக்க முடியும்? காலையில் பிரிவாற்றாமையோடு புறப்பட்டு, மாலையில் பிரியத்தோடு ஓடி வந்து தன் செல்வங்களைக் கட்டிக் கொள்வாள் அவள். கண்ணீர் கன்னங்களில் மாலையாகப் புரளும். கணவன் மீது மனஸ்தாபம் தொடரும். மௌனமாகவே சகித்துக் கொள்வாள் மீரா.

தன் முதல் சம்பளத்தை, ஏதோ தனக்குச் சம்பந்தப்படாதது ஒன்று, அவனுக்காகச் சுமக்கும் பாவனையோடு அவன் கையில் தந்தாள். அதை அப்படியே சேமிப்பில் சேர்த்துவிட்டான் அவன். இருவர் சம்பாத்தியத்தின் வளமை அங்கே கொழிக்கவில்லை. மேலும் அவன் கடைப்பிடித்த சிக்கனமே அவளுக்கு எரிச்சல் மூட்டியது.

"குழந்தைத் துணிகளைச் சலவைக்குப் போடாதே!"

"தேவைக்கு அதிகமாக உடைகள் வாங்காதே...."



பாஷண கேசரி, விக்ஞான சிந்தாமணி, வித்யாரத்னம், கவிதா ரத்னம், பேராசிரியை, திருமதி ஹா. கி. வாலம் அம்மையாரின், ஒவ்வொரு இல்லத்திலும் இருக்க வேண்டிய, "மோகனப் பதிப்பகத்தாரால்" வெளியிடப்பட்ட இன்றியமையாத இரு பக்தி நூல்கள் :

(1) வடமொழி "தேவி மஹாத்மிய"த்தின் தமிழாக்கமும், துர்க்கா லக்ஷ்மி தேவி குமாரி போன்ற தேவிகளின் தோத்திரப் பாடல்களும், ஆசிரியையின் சொந்தப் பாடல்களும் கூடிய

**அன்னையின் அருள் துலங்கும் "தேவி மகாத்மியம்".**

(2) வடமொழி பாகவத தசம ஸ்கந்தத்தின் (கண்ணன் பால லீலைகளை விவரிக்கும்) தமிழாக்கத்தின் முதற் பாகமாகிய

**கண்ணன் களிநடம்புரியும் "மோகன லீலை"**

கவர்ச்சிமிக்க மூவர்ண அட்டையுடன் முறையே தேவியின் திருஉருவப்படமும், கண்ணனின் படமும் கொண்ட இவ்விரு பக்தி நூல்கள் ஒவ்வொன்றும் சுமார் 250 பக்கங்கள் கொண்டது.

**ஒவ்வொன்றின் விலை ரூ. 5/-** (தபால் செலவு ரூ. 1/- தனி)

(குறிப்பு : இரு நூல்களையும் சேர்த்து வாங்குவோர்களுக்கு தபால் செலவு இலவசம்)

தங்கள் தேவைக்குக் கீழ்க்காணும் முகவரிக்கு எழுதவும் :

**திருமதி ஹா. கி. வாலம்**

9-E, எட்வர்டு எலியட்ஸ் ரோடு, மயிலை, சென்னை - 4 (போன் : 88998)

ஆசிரியையின் மற்ற நூல்கள் : மோகன முகுளம், மோகன முரளி, மோகன வாணி, மோகன அமுதம், வடிவழகி திரு ஆயிரம், வேங்கடேச சுப்ர பாதம், அழகின் அலை, திருமால் திரு ஆயிரம், ரகுகோவிந்தம் - விவரங்களுக்கு ஆசிரியைக்கு எழுதவும் :

---

இவனுடைய ஆரோக்யத்தின் ரகசியம்

# அமிர்தாஞ்சன் கிரைப் மிக்சர்!

உங்கள் குழந்தை எப்படி இருக்கிறது?



அமிர்தாஞ்சன் லிமிடெட்

FDSAGMI267TM

# தசைகளை சக்தி ததும்ப உரமேற்றுக

## நித்தமும் சில நிமிடங்களே போதும்



**ஒப்பிட்டுப் பாரீர்--
இத்தகைய நலங்களைப் பெற இன்னொரு வழி ஏது?**

ஆடவர் பொறுமைப்பட, பெண்கள் மெச்ச அபாரமான கட்டுடலை உருவாக்கத் துடியான வழி பிறந்து விட்டது--அன்றுடம் ஐந்தே நிமிடங்களில் வெற்றி! பாரம் தூக்கவேண்டாம் பார்பெல்கள் இல்லை. சலிப்பூட்டும் சடங்குகளும் இல்லை. எளிய முறை. விரைந்த பயன். பயிற்சிப் பட விளக்கங்களோடு முழு விவரம் அடங்கிய புத்தகத்தை இலவசமாகப் பெற, இங்குள்ள கூப்பனைத் தபாலில் அனுப்புக.

**விஞ்ஞான நிருபணம் பெற்ற ஐஸோமெட்ரிக் தத்துவங்கள்**

இதன் மர்மம்? ஒலிம்பிக் வீரர்களுக்கென உருவாககப்பட்ட, புரட்சிகரமான புதிய கண்டுபிடிப்பாகிய **புல்ஒர்க்கர்-2.**

பார்த்தறியாதவிந்தை. ஐஸோமெட்ரிக், ஐஸோடோனிக் தத்துவங்கள் இணையப் பெற்ற, விலைகுறைவான, எடுத்துச்செல்லத்தக்க, இலேசான கருவி. உருப்படியான இம்முறையை பின்பற்றி, சிகரமான சக்தி ததும்ப உங்கள் தசைகளைப் படிப்படியாக உருவாக்குக. முகக்ஷவரத்திற்குரிய நேரம்கூட ஆகாது இதற்கு!

**வழிகாட்ட ஓர் இலவச நூல்—
நிர்ப்பந்தம் ஏதுமில்லை**

உடம்பின் எப் பகுதிக்கு திடமான வீரிய வடிவு தரும் முயற்சியைத் துவக்கத் துடிக்கிறீர்கள்? புகைப் படங்களுடன் முழு விவரங்கள் அடங்கிய இலவசப் புத்தகத்தைப் பெற, இன்றே இக் கூப்பனைத் தபாலிடுக.

**உலகெங்கும் பாராட்டு**

புல்ஒர்க்கருக்கு அடிப்படையான புரட்சிகரமான ஐஸோமெட்ரிக்-ஐஸோடோனிக் தத்துவத்தை, உலகெங்குமுள்ள ஒலிம்பிக் சேம்பியன்கள், தொழில்முறை ஆட்டவீரர்கள் பயிற்சியாளர்கள், ஆட்டத்துறை டாக்டர்கள் யாவரும் அங்கீகரித்துள்ளனர். ரீடர்ஸ் டைஜஸ்ட், டெர் ஸ்டர்ன், லுக் ஆகிய பத்திரிகைகளில் அறிவிப்புப் பெற்ற இம் முறை, கண்டறியாத ஒப்பற்ற வேகத்திலே உடற்கட்டு அமைக்கும்—வாலாய முறைகளை விட நாலு மடங்கு வேகத்திலே.

©Mail Order Sales Pvt. Ltd.
15 Mathew Road, Bombay 4

**இன்றே**

பயிற்சிப் புகைப்படங்கள், சான்றேடுகள், புல்ஒர்க்கர்-2 பற்றிய முழு விவரம் அடங்கிய இலவசப் புத்தகத்தினை நிர்ப்பந்தமின்றி எனக்கு அனுப்புக. 15 பை தபால் வில்லை இணைத்துள்ளேன்.

பெயர் ____________________

முகவரி ____________________ வயது ______

**BULLWORKER SERVICE 15 Mathew Road, Bombay 4** KL 2

தயவு செய்து எமது முகவரியை ஆங்கிலத்தில் எழுதி அனுப்பவும்

"எங்கே போனால் என்ன, பஸ்தான்! டாக்ஸி வேண்டாம்!"

அநாவசியச் செலவுகள் என்று அவன் நினைப்பதை யெல்லாம் குறைத்தான், குறைக்கச் செய்தான்.

"எல்லாச் செலவையும் குறைத்தீர்கள். இந்தப் பூவை மட்டும் இன்னும் மூன்று முழமே வாங்குவானேன்? மாதத்துக்கு ஒன்பது ரூபாயாகிறதே. ஒரு முழம் வாங்குங்கள், போதும்!"

"அதைக் குறைக்க வேண்டாம் மீரா. நீ தலை நிறையவே வைத்துக்கொள். எனக்கு அதுதான் பிடிக்கிறது. உன்னை அப்படித்தான் பார்க்க வேண்டும் நான்...!"

கணவனின் அந்த ஆசையைக் கண்டு பெருமையோடு சிலிர்த்துக் கொண்டாள் அவள்.

அவள் முதுகுப்புறத்தைப் பார்த்தவாறே நெட்டுயிர்த்தான் அவன். பிறகு "மீரா!" என்றவாறே அவளைத் தன்பால் திருப்பினான். இந்தச் செய்கைக்கும் அழைப்புக்கும் வேறு ஏதேனும் அர்த்தமுண்டா என்று அவனை ஊடுருவிப் பார்த்தாள் அவள்.

அவன் ஏதோ சொல்ல நினைத்தான். விரிந்த கண்களோடும் நம்பிக்கையான முகத்தோடும் ஆர்வம் பொங்க நிற்கும் அவளை ஏமாற்றுவது போன்ற வேதனையில் நெளிந்தான் அவன். எனவே, எதுவுமே சொல்லாமல் அவளை விட்டு விட்டுத் திரும்பி விட்டான்.

நிழலிலிருந்து ஒளியைக் கிளறுவதுபோல் தான் இனி அவளிடம் பேசவும். எனவே எதுவும் விளங்காமல் அவனைக் கண்காணிக்கும் பார்வையோடு தூர நின்றாள்.

"உன்னுடைய ஆபீஸ் பரீட்சை எழுதினாயே, என்னவாயிற்று மீரா?"

"பாஸ் பண்ணி விட்டேன்."

"சபாஷ்! இன்னொரு பரீட்சையும் எழுதி விட்டாயானால் சூப்பரின்டெண்ட் பதவி கூடக் கிடைக்கும்!"

அவளையும், அவள் உற்சாகத்தையும் கண்டு அவனுக்கு வேடிக்கையாக இருந்தது. அவன் முகத்தில் தெரிந்த களைப்பு, உடம்பில் தெரிந்த தளர்ச்சி, உல்லாசங்களைத் துறந்து விட்ட நிதானம் எல்லாமே அவளை என்னவோ செய்தன.

"உனக்கு இனிமேல் தன்னம்பிக்கையும், தைரியமும் வந்துவிடும் மீரா!"

அவளிடம் தன் மகிழ்ச்சிக்குப் பிரதிபலிப்பு இல்லை என்றதும் ரவீந்திரன் கேட்டான்: "உன்னை வருத்திக் கஷ்டப்படுத்துகிறேனா மீரா? இந்த வாழ்க்கை உனக்குச் சலித்து விட்டதா?... ஆமாம்! உன்னைப் பூ மாதிரி வைத்துக் கொள்ளாமல் வாட்டுகிறேனே நான்....." அவன் குரல் தழுதழுப்பில் நின்றது.

"அப்படியெல்லாம் இல்லை... அப்படியெல்லாம் இல்லை... எனக்கு இந்த வாழ்க்கை பழகிவிட்டது. இதில் வருத்தப்பட ஒன்றுமே இல்லை" என்று மீரா அவனைச் சமாதானப் படுத்தினாள்.

தூக்கத்தில் புரண்ட மீரா எழுந்து உட்கார்ந்தாள். பால் நிலவின் பொழிவில் ஜன்னலோரம் நடை பயின்று கொண்டிருந்தான் ரவீந்திரன்.










"ஐயோ! என்ன வந்தது. இவருக்கு மறுபடியும்....!" என்று பயந்து எழுந்த மீனு அவன் அருகே வந்து கைகளைப் பற்றிக் கொண்டாள். "மறுபடியும்.. மறுபடியும்... உங்களுக்கு...." என்று திணறலுடன் கேட்கிறாள். "இப்படி இரவுத் தூக்கம் வராமல் தவிக்கிறீர்களே..."

சாய்ந்து கிடந்த அலையாய்க் குமுறியது ரவீந்திரனின் மனம். அதைச் சமனப்படுத்திக் கொண்டு சமாதானமான குரலில் கூறினான் அவன். "சற்று நேரத்துக்குமுன் அப்படித் தான் இருந்தது மீனு. இப்போது சற்றுத் தேவலை...."

"நீங்கள் எதையோ என்னிடம் மறைக்கிறீர்கள்! நான் அத்தகை வேண்டாதவளாக ஆகி விட்டேனா? எதையும் என்னிடம் சொல்லிக்கொள்ளத் தோன்றவில்லையா உங்களுக்கு? அப்படி என்ன குற்றம் செய்து விட்டேன் நான்? எனக்கு ஏன் இந்தத் தண்டனை?" தேம்பலோடு மீனு அவன் காலடியில் தடாலென்று விழுந்து விட்டாள்.

"மீனு! மீனு இதென்னம்மா மீனு? எழுந்திரு அழாதேம்மா நான்... நான்.... அதை எப்படி மீனு உன்கிட்டே சொல்லுவேன்?"

"எதுவானாலும் சொல்லுங்கள், ஏற்கக் கடமைப்பட்டவள் நான்!"

"ஐயோ! மீனு உனக்கு இது ஒரு சோதனை. எனக்கு ஏன் இந்தத் தண்டனை என்றுயே, அதை நான் தரவில்லை மீனு. தெய்வம் தான் உன்னைத் தண்டிக்கிறது! மாசுமறுவில்லாத உன் மனத்தை, என்னையே நம்பி வந்து விட்ட உன் நம்பிக்கையை நாசமாக்கிவிட்டது மீனு...."

"என்ன என்ன சொல்லுகிறீர்கள், நீங்கள்?"

"உட்கார் மீனு! உன்னை நீயே திடப்படுத்திக் கொள். உன்னிடமும் சொல்லித் தானே ஆக வேண்டும், என்றாவது ஒரு நாள்...." என்ற ரவீந்திரன் மீனுவை உட்காரச் சொல்லி விட்டுத் தானும் அவள் அருகே அமர்ந்தான்.

"உனக்கு ஞாபகமிருக்கிறதா மீனு! நம் கடந்த கால வாழ்க்கையில், ஐந்தே வருடங்கள் என்றாலும் எவ்வளவு சந்தோஷமாக வாழ்ந்தோம்? மற்றவர்கள் புறக்கணிப்பை என் பலம் மிகுந்த தோள்களில் தஞ்சம் புகுந்ததின் மூலம் லட்சியப்படுத்தாமல் இருந்தாய்! என் அன்பை, ஆதரவைச் சாசுவதம் என்று நம்பி வந்து என் வாழ்க்கைக்கு ஒளியூட்டினாய்! வாழ்நாள் முழுதும் தொடருவேன் நான் என்று கைகொடுத்தாய்! ஆனால் என்னால் தொடர முடியாது மீனு...."

"ஏன்.... ஏன்?" அச்சம் தேங்கும் அவள் விழிகளில் மறுப்பு திரையிட்டது.

"சின்ன வயசில் எனக்கு மூட்டுக்கு மூட்டு வலி வரும். அம்மா ஒத்தடம் தருவாள். உடன் ஜுரம் வரும். கசப்பு மருந்து சாப்பிட்டுச் சமனப்படுத்திக் கொள்வேன். அது எத்தகைய பயங்கரத்தின் அறிகுறி என்று மட்டும் உணர்ந்திருந்தால் உன்னை, உன் வாழ்க்கையை என்னுடன் பிணைத்துக் கொண்டு இப்படி அரைகுறையாக்கி விருக்க மாட்டேன்...."

"இப்போது என்ன வந்தது எனக்கு? இதைவிடச் சந்தோஷமான வாழ்க்கை எந்தப் பெண்ணுக்கும் அமைந்திருக்க முடியாதே....!" என்று குறுக்கிட்டாள் மீனு.

"ஆனால் மீனு! எல்லா மலர்களுக்கும் ஒரு நாள் முழுதும் மலர்ச்சி உண்டென்றால், விடியலிலேயே வாடிவிடும் மல்லிகைப்பூவாக உன் வாழ்வு கருகி விடும் போல் உள்ளதே!"

"அப்படிச் சொல்லாதீர்கள்..." என்று அவள் அலறினாள்.

"என் இருதயம் மிகவும் பழுதுபட்டுவிட்டதால் எனக்கு வாழ்நாள் மிகவும் குறைவாம் மீனு......!"

மிருதுவான பாய்ச்சலாக இருந்தது அந்த விஷக் கணை. அவள் 'ஓ'வென்று குமுறி அவன் நெஞ்சைத் தஞ்சம் புகுந்தாள். தீ விட்டாற் போல் அவள் உடம்பு நடுங்கி விதிர்த்தது. இதயமே வெடித்து விடும் போன்ற கேவல்கள் திணறின.

அவள் கேவல்களின் இடையிடையே அவனது சலனமற்ற குரல் மெல்ல ஒலித்தவண்ணம் இருந்தது.

"அன்றொரு நாள் சினிமா தியேட்டரில் படியேறத் தவித்துப் போனேனே, அப்போது இந்த நோயின் முழு விழிப்பும் என்னிடம் நேர்ந்திருக்கிறது. அதை டாக்டர் கூறிய போது நான் அதிர்ந்தேன். அது எனக்காக மட்டுமல்ல மீனு.... உனக்காக நான் ஏற்ற வாழ்வில், உன்னைச் சுற்றியே வலம் வந்த

என் எண்ணங்கள் இடிந்து நொறுங்கிவிட்டன: உன்னை எப்படியெல்லாம் வாழ்விக்க வேண்டும் என்று கனவு கண்டு வந்த நான், நீ இப்படித்தான் வாழ வேண்டும் என்று உன்னை வேலியில் அமர்த்திவிட்டேன். நான் இல்லாமல் வாழ்வதற்கு உனக்கு ஒரு வழி காட்டி விட்ட திருப்தியில் நான் இறுமாந்தேன்.... இல்லை மீனு! எதையெல்லாம் 'எப்படி மீதியாக்கலாம், எப்படி உன் சேமிப்பைப் பெருக்கலாம், எப்படி உன் எதிர்கால வாழ்க்கை பிறரிடம் கையேந்தாத வாழ்க்கையாக இருக்க வேண்டும் என்றெல்லாம் திட்டம் தீட்டிச் செயல்படுத்தினேன். உன்னைக் காணும்போது எல்லாம் வேதனையில் வெந்தேன்.

''உன்னைத் திசை திருப்பி விட்டேன். என்னை நினைத்தே நீ மூழ்கிவிராமலிருக்க வேறு பல பொறுப்புக்களும் தந்தேன். உன் உல்லாசங்களுக்கு உற்றவனாகிவிடாமல் தடுத்தது உன்னோடு வாழும் இந்த வாழ்வு மேலும் குறைந்துவிடக் கூடாதே என்ற அச்சம். நீ இடிந்துவிடக் கூடாதே என்ற மன நடுக்கத்தில்தான் உன்னிடம் எல்லாவற்றையும் மறைத்துவிட்டேன்....

''என் கைகளில் உன்னைத் தாங்கிக் கொள்வேன் என்ற நினைப்பில் முன்பு காசைக் கரைத்தேன். இப்போது நானே காலத்தால் கரைந்து கொண்டு வருகிறேன் என்று உணர்ந்ததும் உன்னை வாழ்விக்க வைக்கும் செல்வத்தைச் சிக்கனமாகச் சேர்த்து வைத்தேன். என்றும் பூவில் சிக்கனம் என்பதை நான் வரவேற்கவில்லை. நான் இருக்கப் போகும் கொஞ்ச நாட்களில் நீ தலை நிமையப் பூச்சூட்டி நிற்க வேண்டும் என்றுதான்!....

''எனக்கு ஒரு விதத்தில் திருப்தி மீனு. உன்னையும், குழந்தைகளையும் விட்டுவிட்டுத் திடுமெனப் போய்விடாமல், முன்பே தெரிந்ததால், உனக்கு நிலையான வருமானம் வரும்படி ஏற்பாடு செய்ய முடிந்ததே... இனிமேல் உனக்குத் துணையில்லை, ஆதரவில்லை என்ற துன்பங்கள் தவிர, நம் குழந்தைகளுக்கு எவ்விதக் குறையும் வராது.' அவர்கள் யாரிடமும் கையேந்தி நிற்க நேரிடாது. ஏனென்றால், அவர்களுக்கு நீ இருக்கிறாய். என்ன மீனு! நான்பாட்டில் பேசிக் கொண்டிருக்கிறேன். நீ இப்படி இருக்கிறாயே....?''

''நான்... உறைந்து போய்விட்டேனே.... நான் மடிந்து போய் விட்டேனே... எனக்கு எதுவுமே புரியவில்லையே?...''

அவளிடம் திமிர்ப் பதைப்பு. அதற்கு மேல் ஒன்றுமே இல்லாதது போன்ற ஒரு திகைப்பு. அதுவே திகிலாக விரிந்த உணர்வு. சலனமில்லாமல் பரவிவரும் போல் ஓரே இருள். ஓரே வெறுமை. உலகமே ஓய்ந்தாற்போல் நடுக்கம். பாதை முடிவற்ற காட்டிடையே சிக்கிக் கொண்டாற் போல் பயங்கரத் தனிமை. பல்வேறு உணர்வுகளால் நிலைவு தடுமாறினள் அவள். அந்த எல்லைகளை யெல்லாம் தாண்டி யதார்த்த உண்மையை மறுபடியும் புரிந்து கொண்டபோது மீண்டும் குமுறி அழுதாள்.

சற்று நேரம் கழித்து ரவீந்திரன், ''மீனு'' என்று அழைத்தான். அவன் எழுந்து விளக்கைப் போட்டான். அது மன இருளைக் கிழித்தெறியவில்லை என்றாலும், சூழ்ந்திருந்த இருளைத் தூர விலக்கியது.

அவள் நிதானமாகக் கணவனைப் பார்த்தாள்.

''மீனு! என்னம்மா அப்படிப் பார்க்கிறே?'' என்று துடிப்பின் வேதனையோடு கேட்ட ரவீந்திரனின் கண்களில் இத்தனை நாளும் ரகசியமாகப் பதுக்கி வைத்திருந்த கண்ணீர் பகிரங்கமாக வழிந்தது.

அவள் கண்ணீரை முந்தானையால் ஒற்றி விட்டு, முகத்தை உயர்த்தினான். மெல்ல மெல்லக் கணவனை உற்று நோக்கிய அவள் பார்வையின் ரேகையில் ஒரு சிறு சிரிப்பின் தெறிப்பு அலைமோதியது. அந்தச் சிரிப்பு மெதுவே அடங்கி மௌனமான போது அவள் கண்கள் சரமடைந்தன. தன் மாங்கல்யத்தை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள் அவள். அந்த முகத்தில் பழைய மீனு. பழைய நம்பிக்கை. உறுதி எல்லாம் குடியேறி விட்டன.

''உங்களுடன் வாழும் வாழ்வை நான் நேசிக்கிறேன் என்று சொன்னால் போதுமா, நான் பக்தி செய்கிறேன்! அது எனக்கு எப்போதும் மங்களம் தரட்டும்! அதற்காக நான் அல்லும் பகலும் பிரார்த்திப்பேன்! கடவுளின் அருளால் இனி மறையப் போகும் ஒவ்வொரு நாளும் எனக்குப் பாக்கியத்தைக் கொடுக்கட்டும்!''

அந்தச் சொற்களும், அதன் உணர்ச்சிகளும்.. ஏதோ ஓர் உன்னத துதிப் பாடல் காதில் ரீங்கரிக்கும் பக்திப் பரவசம் ஏற்படுத்தது ரவீந்திரனுக்கு!



# பரிசு

ப. மு. இளங்குமரன்

பஸ்ஸை விட்டு இறங்கியவன் வியப்பினாலும், ஆச்சரியத்தினாலும் வாயைப் பிளந்தான்; கண்களை அகலத் திறந்தான்.

அடேயப்பா! மதுரை பஸ் நிலையம்தான் இந்த ஏழு வருடங்களில் என்ன அருமையாய் உருமாறித் தோற்றம் கொடுக்கிறது!

குருமூர்த்தி சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்து சில நிமிடங்கள் கண்களை மூடிக் கொண்டான்.

திருச்சி சிறைச்சாலையில் — கொலைக்குற்றம் சுமத்தப்பட்டு, நான்கு வருடக் கடுங்காவல் தண்டனையைச் சாகும்வரை மறக்க இயலாத அளவுக்குக் கடுமையாக அனுபவித்து விட்டு விடுதலையாகி அன்றுதான் மதுரைக்கு அவன் வந்திருந்தான்.

திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த துவரங்குறிச்சிதான் அவன் சொந்த ஊர் என்பதும், அவனுக்கு மணமாகி ஏறக்குறைய ஒன்பது வருடங்கள் ஓடி விட்டன என்பதும், கண்ணுக்கு அழகான வண்ணக் கிளியாம் பூமா தான் அவனின் துணைவி என்பதும், உள்ளூர் அச்சகத்தில் கம்பாசிட்டராக வேலை பார்த்து வாழ்க்கையைச் சிரம தசையில் தள்ளி வந்தவன் என்பதும், நூறு ரூபாய்க்கு மாதம் ஒன்றுக்குப் பத்து ரூபாய் அநியாய வட்டிக்குக் கடன் வாங்கினான் என்பதும் அவனுக்கு மறக்கக் கூடாத விஷயங்கள்தாம்.

ஆம் நூறு ரூபாய் என்றாலும் அவன் செலுத்திய வட்டி மாத்திரம் எண்பது ரூபாய்க்கு எட்டிவிட்டது. ஒன்பதாவது மாதம் குடும்பப் பொருளாதாரத்தில் பற்றாக்குறை ஏற்படவே, கடன்காரனுக்கு முரட்டுக் குணம் கொண்ட குருமூர்த்தி கையை விரித்தான்.

முதலில் வாய்ப் பேச்சு; பிறகு வாய்ச் சண்டை; மூன்றாவது ஒருவருக்கு ஒருவர் தள்ளி விட்டுப் போகவிலும் பலப் பரிட்சை; அதிலும் திருப்தி கொள்ளாமல் கடன் கொடுத்தவன் குருமூர்த்தியின் கன்னத்தில் வசம் பார்த்து ஓர் அறைதான் கொடுத்தான்.

அவ்வளவுதான் —

குருமூர்த்தி நரசிம்ம அவதாரம் எடுத்தான். வீட்டுத் திண்ணையின் மூலையில் அக்கடாவென்று படுத்துக் கிடந்த வீச்சரிவாள் அவன் வலக் கையில் வந்து சிக்கிக் கொண்டு, குருதியை நக்கி, ருசி பார்க்கத் துடித்தது.

அதன் பலன் —

வட்டியை மட்டுமே வாங்கிக் கொண்டிருந்த எதிராளி தன் வெறுமையான கழுத்தில் அழகாக வெட்டு ஒன்றையும் அசலாகவே ஒரு வினாடியில் பெற்றுக் கொண்டு பிணமாக வீதியில் விழுந்தான்.

சட்டம் குருமூர்த்தியைப் பிடித்து நான்கு வருடங்கள் வரை திருச்சி சிறைச்சாலையில் இருந்துவிட்டு வரும்படி அனுப்பி வைத்தது.

நிறை கர்ப்பிணியான பூமா மூர்ச்சையாகிக் கோர்ட்டில் விழுந்ததைத்தான் அவன் கடைசியாகப் பார்த்தான். அதன் பிறகு, கடிதத்தின் மூலம் அவளை அவளின் பிறந்த ஊரான திருமங்கலத்தில் போய் இருக்கும்படியும், தன்னைத் திருச்சி சிறையில் வந்து பார்க்கவே வேண்டாம் என்றும், நிம்மதியாக இருந்து, உடம்பைக் கவனித்து, குழந்தையைப் பெற்றெடுக்கும்படியும் கண்டித்துச் சொல்லி விட்டான்.

நாட்கள் வாரங்களாக-வாரங்கள் மாதங்களாக — மாதங்கள் வருடங்களாக இப்படியே நான்கு வருடங்கள் எப்படியோ உருண்டோடி விட்டன.

விடுதலையடைந்து மாமனார் வீட்டுக்குப் போகும்போது வீசின கையும் — வெறுங் கையுமாகப் போவது அவ்வளவு நன்றாக இல்லை. அதுவும் பூமா பெற்ற குழந்தைக்கு ஏதாவது அருமையான பரிசு வாங்கிப் போகாமல் இருப்பதா! அவன் பாராத அந்தக் குழந்தைக்கு — இல்லையில்லை; செல்ல மைந்தனுக்கு இப்போது நாலு வயது நடக்குமே!

ஏதாவது தங்கத்தால்...

கீழுதட்டைக் கடித்துக் கொண்டு சட்டைப் பையைத் தடவினான்.

எம்பிக் குதிக்க அவனுக்கு எப்படி முடிந்தது!

நான்கு வருடச் சிறை வாழ்வில் அவன் பார்த்த வேலைக்கான ஊதியத்தைப் பத்து ரூபாய் நோட்டுக்களாக மாற்றிச் சட்டைப் பையில் வைத்திருந்தானே!

எல்லா வகையிலும் தனிச் சிறப்புப் பெற்ற மதுரை இதில் மட்டும் சோடை போய் விடுமா என்ன? எவனோ ஒரு மதுரைக் கில்லாடி அவனுக்கு ஓர் ஐந்து ரூபாய் நோட்டையும், சில்லறை நாணயங்களையும் 'இரக்கப்பட்டு' வைத்துவிட்டுப் பத்து ரூபாய் நோட்டுக்களை மட்டும் நோகாமல் அமுக்கிப் போய் விட்டானே!

முரடன் குருமூர்த்தியின் உடல் பதறியது; உள்ளம் கலங்கியது; கண்கள் நீராயின; இதயம் நெருப்பாக எரிந்தது; மனம் கொடிய விஷத்தை உமிழும் நாகமாயிற்று.

தன் குழந்தைக்கு இந்த மதுரையிலிருந்து எப்படியாவது ஒரு விலை உயர்ந்த பரிசைத் திருடிக் கொண்டு போய்க் கொடுத்து விடுவது என்று வக்கிர புத்தியுடன் சங்கல்பம் எடுத்தான்; பஸ் நிலையத்தை நோட்டமிட்டான்.





மெள்ளவே — விரிப்பாகவே நடந்தான்; சுற்றிச் சுற்றி வரலானான்.

பஸ் நிலையம் பிரயாணிகளின் நெரிசலினால் திணறிக் கொண்டிருந்தது.

விநாடிகள்; நிமிடங்கள் — கடைசியில் இரண்டு மணி நேரம் கழிந்த பிறகு வாய்ப்புக் கிடைத்தது.

நடுத்தர வயதுள்ள பணக்காரத் தம்பதிகள் அவர்கள் பக்கம் நான்கு வயது மதிக்கத்தக்க ஓர் அழகான சிறுவன் பளபளப்பான விலை உயர்ந்த உடையணிந்து நின்றிருந்தான். அவன் போட்டிருக்கும் உடையைப் பற்றி அவனுக்கு — அந்தக் காரியக்கார குருமூர்த்திக்கு என்ன கவலை! ஆனால், அவன் கழுத்தில் அணிந்திருந்தானே சுமார் ஒன்றரைப் பவுன் எடையுள்ள மைனர் சங்கிலி —

அதைப் பற்றித்தான் அவனுக்குக் கவலை; கரிசனம்; கவனிப்பு; பதற்றம்; வேட்கை.

கையில் தர்மாஸ் பிளாஸ்குடன் அந்தப் பெரிய மனிதர் ஹோட்டலை நோக்கி நடந்தார்; அந்தப் பெண்மணி சிறுவனின் கையைப் பற்றிக் கொண்டு அங்கேயே நின்றாள்.

விநாடிகள் நழுவிக் கொண்டிருந்தன.

குருமூர்த்திக்கு மூளை வேலை செய்தது.

விருட்டென்று இடையில் நுழைந்தான்.

"அம்மா, அம்மா! நீங்க... நீங்கதானே இப்போ ஹோட்டலுக்கு வந்தவரோட..... ஐயாவுக்குத் திடீரென்று நெஞ்சு வலி வந்து அங்கே துடியாய்த் துடிக்கவிட்டு இருக்கிரு! சீக்கிரம் வாங்கம்மா!" — தரம் வாய்ந்த நடிப்பு.

பேதை நம்பி விட்டாள்; பதற்றத்தோடு விரைந்தாள். சிறுவனைத் தூக்கித் தன் தோள் மீது போட்டுக் கொண்டு அவளைப் பின் தொடர்ந்து சில மீட்டர் தூரம் நடந்த குருமூர்த்தி, குபீரென்று — நகர்ந்து கொண்டிருந்த அழகர்கோயில் செல்லும் பஸ்ஸில் ஏறிவிட்டான்.

சிறுவன் நல்லவன்; எதுவுமே பேசாமல் அவன் மடியில் அமர்ந்து பேந்தப் பேந்த விழித்தான்.

காலதேவனின் கைகளை விட்டு நிமிட முத்துக்கள் உருண்டோடின.

சரியாக மணி பன்னிரண்டுக்குப் பஸ் அழகர் கோயிலை அடைந்தது.

மலைப் பாதையில் சிறுவனைத் தூக்கிக் கொண்டு வேகமாக நடந்தான்; பழமுதிர் சோலை எதிர்ப்பட்டது; முருகன் காட்சி தந்தான்; ஆள் நடமாட்டமில்லாத மலை வேம்பின் அடியில் போய் நின்று, சிறுவனை இறக்கிவிட்டான். சிறுவனுக்கு ஏதோ உள்ளத்தில் பொறி தட்டியிருக்க வேண்டும்!

"அம்மா.... அம்மா...." என்று வீறிட்டு அலறினான்.

திடுக்கிட்டுத் திகில் வசமான குருமூர்த்தி, கோபத்துடன் அழகான சிறுவனின் குழந்தை வாயைக் 'கப்' பென்று பொத்தினான். சிறுவன் சினத்துடன் அவன் கையைக் கடிக்கவே —

குருமூர்த்தி குரூரமூர்த்தியானான்....

அவன் இரண்டாவது கொலைக்குப் பாத்தியதைப்பட்டதைக் கண்ட ஆந்தை ஒன்று அலறித் துடித்து அடுத்த மரம் பார்த்துப் பறந்தோடியது.

விழிகளில் கொலை வெறி மின்ன — கையில் தங்கச் சங்கிலியுடன் குருமூர்த்தி நிமிடப் பொழுதில் அழகர் கோயிலுக்கு வந்தான்.

பஸ் ஏறி மதுரை வந்ததும் — ஓட்டமும் நடையுமாக வீட்டை அடைந்ததும் ஞால வித்தை போல் இருந்தன.

பூமா வெட்கத்தையும் மறந்து பூரித்த மகிழ்ச்சியுடன் கணவன் மீது சாய்ந்தாள்.

நான்கு வருட கால இடைவெளியின் — ஏக்கம், காற்று நுழையாத அரவணைப்பில் தெரிந்தது.

"பூமா!" என்றபடி பாசத்துடன் மனைவியைப் பார்க்க, அவள் புரிந்து கொண்டு கவரிலிருந்த படத்தைக் காண்பித்தாள்.

முதல் வாரம் எடுத்த புகைப்படத்தில் முத்துநகை காட்டி, முழுச் சந்திரனாய் திகழும் மகனைக் கண்டான். அழகின் சிகரம் காட்சி கொடுத்தது....

பூமா பேசிக் கொண்டிருந்தாள்: "அத்தான்! நம்ம வீட்டுக்கு எதிரே இருக்கிற பங்களாவில் வசிக்கிற செல்வந்தருக்குக் குழந்தையே இல்லே! நம்ம பையன்தான் அவுங்களுக்குத் தெய்வம். அவனைத் தூக்கிக்கிட்டு மதுரைக்கு.... மதுரைக்கு.... அத்தான்..... அத்தான்....." — அலறினாள் அவள்.

குருமூர்த்தி தன் குழந்தையைத் தானே கொன்றான்; அவனை மனச்சாட்சி கொலை செய்து சவமாக்கியது.

இப்போது
புதிய
தோற்றத்தில்!




## ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்டு கேஸ்டர் ஆயில்

பரட்டையான படியாத கேசத்தையும் பணியவைக்கும் நாள் முழுதும் கேசத்தை எடுப்பாக எழிலோங்கச் செய்யும்.

பட்டுப்போன்ற படியும் கேசம்...
ஒளிசிந்தும் எழிலோங்கும் கேசம்...
ஆரோக்கிய நறுமணம் வீசும் கேசம்...
நாள் முழுதும் எடுப்பாக விளங்கச்
செய்கிறது ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்டு
கேஸ்டர் ஆயில்.

ஸ்வஸ்திக் ஆயில்
மில்ஸ், பம்பாய்.

Shilpi SOM 17/69 TA

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon